# ஆத்ம போதனை






ஸத்குரு ஸ்ரீஸ்ரீ சாந்தானந்த ஸ்வாமிகள்

9/1

# ஆத்ம போதனை

## ஸ்ரீ மத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள்





வெளியீடு : ஸ்ரீ புவனேஸ்வரி சாரிடீஸ் டிரஸ்ட்
அதிஷ்டானம், புதுக்கோட்டை - 622 001.

9/1

# ஆத்ம போதனை

## ஸ்ரீ மத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள்





வெளியீடு : ஸ்ரீ புவனேஸ்வரி சாரிடீஸ் டிரஸ்ட்
அதிஷ்டானம், புதுக்கோட்டை - 622 001.

# ஆத்ம போதனை

## ஸ்ரீ மத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள்





வெளியீடு : ஸ்ரீ புவனேஸ்வரி சாரிடீஸ் டிரஸ்ட்
அதிஷ்டானம், புதுக்கோட்டை - 622 001.

உ

ஓம் ஸ்ரீ ஸ்கந்தகுருவே நம:

ஓம் ஸ்ரீ அஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி துர்காதேவ்யை நம:

## ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்தஸ்வாமிகள் அவர்களின்

# ஆத்ம போதனை

1. ஏ மனமே! கழுகின் குணம் உனக்குண்டாகி விடக் கூடாது ஜாக்கிரதை, மறவாதே.

2, ஏ மனமே! நல்லறிவுடையவன் ஒழுக்கத்தோடு இருப்பதால் அவன் சுகமாக ஸொப்பனமின்றித் தூங்கி எழுகிறான். மறவாதே.

3. ஏ மனமே! ஆசையுள்ளவன் கையில் அவனையும் அறியாமல் விலங்கு பூட்டப் பெற்றிருக்கும். மறவாதே.

4. ஏ மனமே! ஆசையற்றவனின் உடல் ஆரோக்யமாக இருக்கும், மறவாதே.

5. ஏ மனமே! உனது குறிக்கோள் ஒன்றிலேயே உனது மனம் அம்புபோல செல்லட்டும், மறவாதே.

6. ஏ மனமே! நம்பிக்கையற்றவன் மனிதனாகவே இருக்க முடியாது. மறவாதே.

7. ஏ மனமே! தமோகுணமுடையவன் சாணை பிடிக்காத கத்தியைப் போன்றவன் என்பதை மறவாதே.

8. ஏ மனமே! நீ நல்லவனாக இருப்பதுதான் உனது கடமை, மறவாதே.

9. ஏ மனமே! துன்பங்களை சகிக்கும் திறமையுள்ளவனே, பூமாதேவியைப் போல் பொறுமையாக இருப்பான், மறவாதே.

10. ஏ மனமே! தனிமறம் போல் வாழ்ந்து வருவையானால் பெருங்காற்றில் விழுந்து இடர்வாய் ஜாக்ரதை, மறவாதே.

11. ஏ மனமே! சோம்பேறி தானும் வாழமாட்டான் பிறரையும் வாழவிடமாட்டான், மறவாதே.

12. ஏ மனமே! முயற்சியுள்ளவனே தனக்குள் உள்ள இறைவனை தனது ஆன்மாவாக உணர்கிறான், மறவாதே.

13. ஏ மனமே! வாழ்நாள் முழுவதும் நீ செய்து வந்த நல்ல செயல்களையெல்லாம் ஒரே ஒரு தீச்செயல் கெடுத்துவிடும்.

14. ஏ மனமே! ஓட்டைக் குடத்தில் தண்ணீர் நில்லாதது போல் ஓட்டை உள்ளம் உள்ளவனிடம் ஒரு ரகசியமும் நில்லாது ஜாக்ரதை, மறவாதே.

15. ஏ மனமே! உடல் வேதனைப்படுமானால் கூடவே மனமும் வேதனைப்படும், மறவாதே.

16. ஏ மனமே! பந்தமும் மோக்ஷமும் மனத்தினிடமே உளது, மறவாதே.

17. ஏ மனமே! ஜாதியும் மதமும் உடம்பினைப் போல் நிலையற்றதாகும், மறவாதே.

18. ஏ மனமே! உனக்கு எதனிடம் ஆசையுண்டாகிறதோ அதுதான் மாயை மறவாதே.

19. ஏ மனமே! பரிசுத்தமனமே பகவானுகி விடுவதால் உனது மனத்தைப் பூரணமாக பரிசுத்தமாக்கிக் கொண்டுவிடு மறவாதே.

20. ஏ மனமே! ஆசையானது பதட்டத்தையும் பகையையும் உண்டாக்கும், ஜாக்ரதை.

21. ஏ மனமே! உனது மனோவிகாரமே உலகமாகும், மறவாதே.

22. ஏ மனமே! நீயிருக்கும்போது வெளியில் வேலைக்காரனைத் தேடுகிறவன் முட்டாள், மறவாதே.

23. ஏ மனமே! மனித சமூகமே உன்னைக் கண்டு பெருமைப்படும்படி நடந்துகொள், மறவாதே.

24. ஏ மனமே! பிறவிக்குணத்தை மாற்ற முடியாது, ஜாக்ரதை.

25. ஏ மனமே! கபடமுள்ள மனிதன் முன் ஜன்மத்தில் நரியாகவே பிறந்திருப்பன், மறவாதே.

26. ஏ மனமே! வெளிச்சத்தை வெறுக்கும் ஆந்தை போல் நீயும் ஆகிவிடாதே, ஜாக்ரதை.

27. ஏ மனமே! அறிவுகெடுமானால் உனக்குள் குழப்பமே மிஞ்சும், மறவாதே.

28. ஏ மனமே! பெருந்தன்மையிருப்பதற்கு அடையாளம் பிறரை உள்ளன்புடன் நடத்துவதாகும், மறவாதே.

29. ஏ மனமே! பற்றற்றவனின் அறிவு (மனம்) கலங்காது என்பதை மறவாதே.

30. ஏ மனமே! உனது கொடிய விரோதி அறியாமையாகும், மறவாதே.

31. ஏ மனமே! நவக்கிரகங்களுக்கும் அப்பாற்பட்ட உண்மையான மெய்ப்பொருளாகவே இருந்துவரும் கிரகம் நீதான் என்பதை "நான் யார்" என உனக்குள் கேட்டு உணர்ந்து கொள், மறவாதே.

32. ஏ மனமே! பல்லாயிரும் முட்டாள்கள் வேண்டாத கேள்விகளைக்கேட்கத் தயாராக இருக்கிறார்கள், ஜாக்ரதை, மறவாதே.

33. ஏ மனமே! பலபேரை நீ நல்லவனாக்கி விடுவதினால் உனக்கென்ன பிரயோஜனம் முதலில் நீ நல்லவனாகி விடு, மறவாதே.

34. ஏ மனமே! நல்ல எண்ணங்களால் உன்னை அழகுபடுத்திக் கொண்டுவிடு, மறவாதே.

35. ஏ மனமே! உன்னைப் பெற்ற தாயினிடம் இருந்து அன்பைக் கற்றுக்கொள், மறவாதே.

36. ஏ மனமே! நன்கு உழைப்பவனே ஆரோக்கியத்துடன் வாழ்வன்.

37. ஏ மனமே! அழிவு காலம் நெருங்கி விட்டவனே தீச்செயலைத் துணிந்து செய்வன், மறவாதே.

38. ஏ மனமே! பிறருக்கு உபதேசித்ததை பேசாமல் நீ செய்து காட்டி விடு, மறவாதே.

39. ஏ மனமே! முயற்சிப்பவனே மேன்மையடைவான், மறவாதே.

40. ஏ மனமே! யோகாசனம் உடலுக்கும் உள்ளத்திற்கும் ஆரோக்கியத்தை உறுதியாக உண்டாக்கித்தரும், மறவாதே.

41. ஏ மனமே! பரிசுத்தமனதிடம் ஆசையிராது, மறவாதே.

42. ஏ மனமே! ஆசையுள்ளவனின் மனம் கடல் அலைபோல் இருந்துவரும், மறவாதே.

43. ஏ மனமே! புருவமத்தியத்தினிடம் முழுமனத்தையும் செலுத்திவிடுவையானால் மனஅமைதி தானேபிறந்துவிடும், மறவாதே.

44. ஏ மனமே! முகம் பார்க்கும் கண்ணாடி தூசிபடிந்திருந்தால் முகம் தெரியாதது போல உனது மனம் பரிசுத்தமாக இல்லாவிட்டால் உன்னை உனக்குள் கண்டு கொள்ள முடியாது, மறவாதே.

45. ஏ மனமே! அன்பற்ற நெஞ்சே நரகம், மறவாதே.

46. ஏ மனமே! புறத்தூய்மை ஸபைக்கு அழகைத்தரும். அகத்தூய்மை உனக்கு அழகைத்தரும், மறவாதே.

47. ஏ மனமே! உன்னிடம் உறுதியான தைரியமிருப்பின் வாய்மையும் இருக்கும், மறவாதே.

48. ஏ மனமே! பிறருக்குக் கேடு நினைப்பவன் மிக இழிந்த பாவியாவன், மறவாதே.

49. ஏ மனமே! சிறந்த சுபாவமுடையவனே பிறருக்கு நன்மை செய்வான், மறவாதே.

50. ஏ மனமே! ஸதா மனச்சோர்வுடன்

ஊக்கமற்றிருப்பவன் போன ஜன்மத்தில் தேவாங்காகவே பிறந்திருக்கக்கூடும், மறவாதே.

51. ஏ மனமே! பேராசையுடையவனின் குணம் பொறாமையுடன் குரூரம் நிரம்பியதாக இருக்கும், மறவாதே.

52. ஏ மனமே! பணிவன்புடன் உபகாரம் செய்துவா, மறவாதே.

53. ஏ மனமே! சந்தேகமிருப்பவன் சுதந்திரமாக வாழ்ந்து வரமுடியாது, மறவாதே.

54. ஏ மனமே! அன்பு நிறைந்த நெஞ்சில் ஆசையோ, கள்ளம் கபடமோ அணுவளவும் இராது, மறவாதே.

55. ஏ மனமே! உலகமாகிய சிறையில் இருக்கும் நீ விடுதலை பெற்றுய்ய ''நான் யார்'' எனக் கேட்பாயானால், சிறைச்சாலையின் கதவு தானே திறந்துவிடும்.

56. ஏ மனமே! இழிவான குணம் உள்ள மனிதன், தன்னைத் தானே தாழ்த்திக் கொள்ளும் ஜாக்ரதை, மறவாதே.

57. ஏ மனமே! சொறி பிடித்தவன் கை சும்மா இருக்க முடியாததைப் போல், அறிவு கெட்ட முட்டாள்களும் சும்மாயிருக்கமாட்டார்கள், மறவாதே.

58. ஏ மனமே! குறிகேட்கப் போகிறவன், பிறருக்குக் குறி சொல்வது முட்டாள்தனமாகும், மறவாதே.

59. ஏ மனமே! உன்னைப்பெற்றதாய், நான்

கொடுத்து வைத்தவள் என்று கூறிக் கொள்ளும்படி இருந்துவா, மறவாதே.

60. ஏ மனமே! தமது தாயினிடம் அன்பு செலுத்தத் தெரியாதவன் இறைவனிடம் மட்டும் எப்படி அன்பு செலுத்த முடியும்? மறவாதே.

61. ஏ மனமே! சோம்பேறி பூமிக்கு பாரமாவான், மறவாதே.

62. ஏ மனமே! சோம்பேறி விதியைப் பற்றிப் பேசுவான், மறவாதே.

63. ஏ மனமே! சோம்பேறிக்கு கடவுளின் உதவியும் கிட்டாது, மறவாதே.

64. ஏ மனமே! திருந்தச் செய்யாத வேலையை மறுபடியும் செய்ய வேண்டியதாக வரும், ஜாக்ரதை, மறவாதே.

65. ஏ மனமே! மூளைகெடுமானால் உடலும் மனமும் அனைத்துமே கெட்டுவிடும், ஜாக்ரதை.

66. ஏ மனமே! உலகத்தை உனது மனமே சிருஷ்டிக்கிறது. ஸங்கல்பம் அற்ற மனத்தில் உலக சிருஷ்டியிராது, மறவாதே.

67. ஏ மனமே! ஸங்கல்பம் அற்றுப்போன மனத்தில் சுகமும், இராது துக்கமும் இராது, மறவாதே.

68. ஏ மனமே! ஒரு நாணயத்தின் இருபுறம் போன்றது மனமும் எண்ணமும், மறவாதே.

69. ஏ மனமே! உடல் அழுக்கு உன்னைக் கெடுத்துவிடாது. மனத்தினிடமுள்ள அழுக்கானது உனக்கு ஆபத்தை

உண்டாக்குவதுடன் பிறப்பையும் உண்டாக்கித் தந்து கொண்டே இருக்கும், மறவாதே.

70. ஏ மனமே! அன்பே கடவுளாகும். கடவுளைத் தேடுகிறவன் முட்டாள் என்பதை நீ மறவாதே.

71. ஏ மனமே! வயிற்றுப்பசியை சுலபமாகப் போக்கிக் கொண்டுவிடலாம், மனத்தின் பசியை கடவுளாலும் போக்கி விட முடியாது, ஜாக்ரதை.

72. ஏ மனமே! உறுதியான மனம் இருப்பவனிடம், சுவர்க்கமும் இருந்துவரும், மறவாதே.

73. ஏ மனமே! மிகக்கொடிய பாவியான நன்றி மறந்தவன் உடலை நாய் நரிகளும் தீண்டாது, மறவாதே.

74. ஏ மனமே! வீர புருஷனான ஆண்மகன் ஒருவனே தனது மனத்தை தனக்கு அடிமையாக்கிக் கொள்வன், மறவாதே.

75. ஏ மனமே! தகுதி அற்றவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்வான், மறவாதே.

76. ஏ மனமே! பாம்பு மறைந்திருந்து கடிக்கும். அதைப் போல்நீயும் மறைந்திருந்து தீங்கு செய்யாதே, ஜாக்ரதை.

77. ஏ மனமே! எதையும் மாற்றிவிடலாம், பிடிவாதத்தை மாற்றவே முடியாது, மறவாதே.

78. ஏ மனமே! பற்றுள்ளவன், ''நான் யார்'' என

சிந்திக்க முடியாது, மறவாதே.

79. ஏ மனமே! கலங்கிய அறிவினிடம் உண்மையான நீதியை எதிர்பார்க்கமுடியாது, மறவாதே.

80. ஏ மனமே! உனது உடம்பே சிறைச் சாலையாகும். விடுதலை வேண்டுமானால் ''நான் யார்'' என உனக்குள் கேள், விடுதலை பெறுவாய், மறவாதே.

81. ஏ மனமே! மண்ணையும், பொன்னையும், பெண்ணையும், சிருஷ்டித்தது உன்னைச் சோதிக்கவே தான், ஜாக்ரதை, மறவாதே.

82. ஏ மனமே! உலகில் மனிதர்களின் உடல்களே கோடான கோடியாக இருந்துவரினும் எல்லோருடைய உள்ளத்தின் உள்ளே உள்ளது ஒரு அழிவற்ற ஆத்மாவாகும் என்பதை நீ மறவாதே

83. ஏ மனமே! நிராசையுடைய ஒருவனே எப்போதும் சந்தோஷமாக இருப்பன், மறவாதே.

84. ஏ மனமே! ஆசையுள்ளவனையே, பெண்களும், ஆண்களும் சுலபமாக ஏமாற்றுவார்கள், ஜாக்ரதை.

85. ஏமனமே! தெய்வத்தைத் தேடுகிறாயே உனது தாயும் தகப்பனுமே கண்கண்ட தெய்வமாகும் நம்பு, மறவாதே.

86. ஏ மனமே! எவன் சிறந்த அறிவுடையவனோ அவன் தேசத்தின் சொத்தாவன், மறவாதே.

87. ஏ மனமே! முட்டாள் செய்யத்தகாத

காரியத்தைத் துணிந்து செய்வன்.

88. ஏ மனமே! ஊக்கமே உனது துணைவன், மறவாதே.

89. ஏ மனமே! பிறருக்கு உபதேசிப்பதை உடனடியாகவே நீசெய்து காட்டிவிடு, மறவாதே.

90. ஏ மனமே! உன்னிடம் உறுதியாக இருக்க வேண்டியது ஒழுக்கமும், உறுதியும் உழைப்புமாகும், மறவாதே.

91. ஏ மனமே! தோற்றம் அனைத்துமே மாயையாகும், மறவாதே.

92. ஏ மனமே! கபடமுள்ளவன் புத்தி கெட்ட கார்யம் செய்வதில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும், மறவாதே.

93. ஏ மனமே! கற்பனை செய்வது மனத்தின் வேலை உனது வேலை சும்மாயிருப்பதாகும், மறவாதே.

94. ஏ மனமே! உன்னை இழுவுபடுத்துவது ஆசையாகும், மறவாதே.

95. ஏ மனமே! உன்னை எனக்குள் நிறுத்துவதும் வெளியில் ஓடவிடுவதும் என்னிடமே உளது, ஜாக்ரதை.

96. ஏ மனமே! உனக்குள் இருந்து வெளிவரும் எண்ணங்களை அறவே நிறுத்திவிடு. உலுகிலேயே மிகப்பெரிய ஸித்தபுருஷன் என்று உளமாரப் போற்றுவார்கள்

97. ஏமனமே! கோழைகளிடம் மன உறுதியிராது, மறவாதே.

98. ஏ மனமே! உலகில் ஒரு மனிதனை அவன் பிறந்தது முதல் போற்றபட்டதுமில்லை தூற்றப்பட்டதும் இல்லை, மறவாதே.

99. ஏ மனமே! குறையுள்ளவனே பிறரைப் பழிப்பன், மறவாதே.

100. ஏ மனமே! பன்றி மலத்தைத்தின்று சுகித்திருப்பதைப்போல் நீயும் அற்ப சுகத்தில் மூழ்கி இறந்து போய்விடாதே.

101. ஏ மனமே! முட்டாளுடன் உறவாடாதே, ஜாக்ரதை.

102. ஏ மனமே! உலகில் அனைவரையுமே கடவுள் உனது ஆத்ம பந்துக்களாகவே சிருஷ்டித்துள்ளான், மறவாதே.

103. ஏ மனமே! நரகத்தில் பழகுகிறவன், பழக்கத்தில் அவை அவனுக்கு இயற்கையாகி விடுகின்றன, மறவாதே.

104. ஏ மனமே! சுயநலமுள்ளவனிடம் உண்மையான அன்பு இராது, மறவாதே.

105. ஏ மனமே! உலகில் உண்மையாக இருப்பது நீ ஒருவனேதான். உனக்குப் பகைவன் என்று ஒருவன் இருப்பின் அவனும் நீ தான், ஜாக்ரதை.

106. ஏ மனமே! உன்னை அளக்கும் கோல் உனது குணமேயாகும், நம்பு ஜாக்ரதை.

107. ஏ மனமே! ஒன்றாக வாழத்தெரிந்தவன் நன்றாக வாழ்வான், மறவாதே.

108. ஏ மனமே! பிறரிடம் உதவியை நாடுகிறவன் எப்படி நிம்மதியாக இருக்கமுடியும் சொல்?

109. ஏ மனமே! ஒரு தூய்மையான பெண்ணைக்கண்டு தேவர்களும் பயப்படுவார்கள், ஜாக்ரதை.

110. ஏ மனமே! உனது தாய் தந்தையர்களை முழுமனத்துடன் வணங்கிப் போற்றி வருவாயானால் தெய்வங்கள் உன்னைப்போற்றும், மறவாதே.

111. ஏ மனமே! உடல் உழைப்பற்றவனிடமே வியாதிகள் குடியிருக்கும், மறவாதே.

112. ஏ மனமே! முதலில் உன்னைக் கெடுக்கும் எண்ணங்களை நீ நினைக்காமல் இருப்பதே உனக்கு நல்லதாகும், மறவாதே.

113. ஏ மனமே! ஊக்கமுள்ளவனே வெற்றியடைவான், மறவாதே.

114. ஏ மனமே! பேராசையே பெருநோயாகும், ஜாக்ரதை மறவாதே.

115. ஏ மனமே! கவனக்குறைவுள்ளவன் வெற்றி பெறமுடியாது, மறவாதே.

116. ஏ மனமே! உடலைநான் என்கிற நினைவு வருமானால் அதுவே மாயையாகும்.

117. ஏ மனமே! உடையும், உடலும் பரிசுத்தமாக இருந்தால் போதாது, மறவாதே.

118. ஏ மனமே! உனக்குள் சென்று, ''நான் யார்'' எனக்கேட்பாயானால் மனம் என்று ஒன்று இல்லாமல் போய்விடும், மறவாதே.

119. ஏ மனமே! உன்னில் நீ நிலைத்திருக்க வேண்டுமென்றால் ''நான் யார்'' என உனக்குள் கேட்டு உன்னைத் தெரிந்துகொள்,

மறவாதே.

120. ஏ மனமே! உனது மனசாட்சிக்கு உண்மையாக நடந்துகொள்வதே உனது கடமை, மறவாதே.

121. ஏ மனமே! உயர்ந்த நல்ல எண்ணங்களைக் கொண்டு உன்னை நிரப்பிக் கொண்டு விடு, மறவாதே.

122. ஏ மனமே! அன்பில்லாத மனிதன் உலகில் வாழ முடியாது, மறவாதே.

123. ஏ மனமே! அறிவிருந்தால் மட்டும் போதுமா? உணர்ச்சியும் உனக்குள் இருக்கவேண்டும், மறவாதே.

124. ஏ மனமே! வயிற்றை மட்டும் வளர்ப்பவன் முன் ஜென்மத்தில் நாயாகப் பிறந்திருப்பான், மறவாதே.

125. ஏ மனமே! கெட்டவர்களின் சகவாசம் அதிகக்கேட்டை உண்டாக்கும், ஜாக்ரதை.

126. ஏ மனமே! நான் அன்புள்ளவன் என்று சொல்லிக் கொள்வதானது உன்னை நீயே ஏமாற்றிக் கொள்வதாகும், ஜாக்ரதை.

127. ஏ மனமே! பிறவிப்பயனை அடைவதற்குத் திறவு கோல் ''நான் யார்'' என உனக்குள் கேட்பதொன்றேயாகும், மறவாதே.

128. ஏ மனமே! நான் ஒரு நல்ல மனிதனாக வாழ்வேன் என்று உறுதியெடுத்துக் கொண்டுவிடு, மறவாதே.

129. ஏ மனமே! நீ நன்மையை நாடுவது உண்மையாக இருப்பின், ''நான் யார்'' எனக்கேள், மறவாதே.

130. ஏ மனமே! நாட்டின் நலத்தைக் கவனிக்க கடவுள் இருக்கிறார். உனது மேலான நலத்தை முதலில் நீ கவனி மறவாதே.

131. ஏ மனமே! உனது பாவத்தைப் போக்கிக் கொள்ளவே நீ தான தர்மம் செய்கிறாய், மறவாதே.

132. தன்னம்பிக்கையுடையவனே நிமிர்ந்து நிற்க முடியும் மறவாதே.

133. ஏ மனமே! நல்லவர்களிடம் பெண்கள் தாயாராக இருப்பார்கள், கெட்டவனிடம் பேயாகி விடுவார்கள் ஜாக்ரதை, மறவாதே.

134. ஏ மனமே! தாய்மார்கள் இல்லாத ஸ்வர்கம் நரகமாகி விடுவதால் தாயை நம்பு, வணங்கு மறவாதே.

135. ஏ மனமே! சோம்பேறி நாட்டின் புல்லுருவியாவன், மறவாதே.

136. ஏ மனமே! உனது செய்களுக்குத் தக்கவாறு வாழ்வும், தாழ்வும் உனக்கு உண்டாகுமென்பதை நீ மறந்து விடாதே.

137. ஏ மனமே! நீ செய்வதைத் திருந்தச் செய்து விடுவதே உனக்குச் சிறப்பாகும், மறவாதே.

138. ஏ மனமே! வழி தவறுமானால் கெடுவாய் ஜாக்ரதை.

139. ஏ மனமே! கடின உழைப்பு உன்னிடம் இருக்குமானால் நீ வெற்றி பெறுவாய், மறவாதே.

140. ஏ மனமே! தான் பிறரை நினைப்பது மாயையாகும். தான் தானாக இருப்பதுவே

ப்ரம்மமாகும், மறவாதே.

141. ஏ மனமே! உண்மை பேசுகிறவனின் மனம் பரிசுத்தமாக இருக்கும், மறவாதே.

142. ஏ மனமே! மாயையானது மனிதனை ஸங்கல்பம் செய்யும்படி தூண்டிக்கொண்டே இருக்கும், மறவாதே.

143. ஏ மனமே! பேராசையுடன் பொறுமையும் இருக்கும் உள்ளம் எரிமலைபோல் இருந்துவரும், மறவாதே.

144. ஏ மனமே! நல்ல அறிவற்றிருப்பதே மிகக்கொடிய வறுமையாகும், மறவாதே.

145. ஏ மனமே! வியாதிகளின் இருப்பிடம் ஆசையென்பதை மறவாதே.

146. ஏ மனமே! நரகமும் ஸ்வர்க்கமும் தனக்குள்ளேயே இருக்கிறது. எதில் வேண்டுமானாலும் வாஸம் செய்யலாம், ஜாக்ரதை.

147. ஏ மனமே! வல்லமையுள்ளவன் தனது பந்துக்களையும், மித்ரர்களையும் காக்காவிடில் அவனை அசுரன் என்று நம்பிவிடு, மறவாதே.

148. ஏ மனமே! நல்லறிவும், ஒழுக்கமும், உழைப்பும் உன்னிடம் இருக்குமானால் நீயும் உலகில் ஒரு நல்ல மனிதனாகிவிடுவாய், மறவாதே.

149. ஏ மனமே! முந்தின ஜென்மத்தில் வேட்டை நாயாகப் பிறந்துள்ளவனிடம், வெறிபிடித்த நாய்க்கு வரும் கோபம் போல் முன் கோபமானது அடிக்கடி வரும், ஜாக்ரதை.

150. ஏமனமே! நல்லறிவோடு நல்ல ஞானத்துடன் சுறுசுறுப்புள்ள மேதாவிகள் குழந்தையைப் போன்ற குணமுடையவனுகவே இருப்பன், மறவாதே.

151. ஏ மனமே! இழிவான குணமுடையவன் எல்லோரையுமே தூற்றுவன், மறவாதே.

152. ஏ மனமே! எதையும் நன்கு புரிந்து கொண்டு பேசு. இல்லாவிட்டால் முட்டாள் பட்டமே கிட்டும், மறவாதே.

153. ஏ மனமே! உனக்குள்ள சொந்த அழிவற்ற சொத்து நீ தான் மறவாதே.

154. ஏ மனமே! நல்லகாலம் வரும் என்கிற நம்பிக்கையுடன் பொறுமையாக இரு, மறவாதே.

155. ஏமனமே! சஞ்சலமுள்ளவன் மனம் அடிக்கடி பச்சோந்தியைப் போல மாறும் மறவாதே.

156. ஏ மனமே! நீ செய்த பாவத்தைப் போக்கிக் கொள்ள கொடுப்பது உபகாரமாகி விடாது ஜாக்ரதை, மறவாதே.

157. ஏ மனமே! உலகில் உள்ள பெண்களே, பெண்தெய்வமாகக் கண்டுகொள், மறவாதே.

158. ஏ மனமே! ஒரு பெண் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, தன்னம்பிக்கை உடையவளால் தான் முடியும். தேவனுலும் மனிதனுலும் பெண்ணைக் காப்பாற்ற முடியாது, மறவாதே.

159. ஏ மனமே! தாயில்லாத குழந்தையின் துக்கத்தை கடவுளாலும் போக்கிவிட முடியாது, மறவாதே.

160. ஏ மனமே! உனது மூளையைத் துருப் பிடிக்கும்படி விட்டுவிடாதே.

161. ஏ மனமே! தோற்றத்தில் மட்டும் நீ மனிதனாக இருந்தால் போதாது, மறவாதே.

162. ஏ மனமே! தனது திறமைகளை பயன்படுத்திக் கொள்ளத் தெரியாதவன் முட்டாள், மறவாதே.

163, ஏ மனமே! வயிற்றை மட்டும் வளர்ப்பவன் பாபி, மறவாதே.

164. ஏ மனமே! ஸங்கல்பத்தைத் தியாகம் செய்து விடுவாயானால் நீண்ட நாள் ஆரோக்கியத்துடன் பிரம்மானந்த சுகத்தோடு இருந்து வரலாம், மறவாதே.

165. ஏ மனமே! நினைப்பே பந்தம் ஒன்றையும் நினையாதிருப்பதுவே மோக்ஷம், மறவாதே.

166. ஏ மனமே! நீ மஹாயோகியாகி விடவேண்டுமென்றால் கல்மலைபோல் உனது மனத்தை அசைவின்றி நிறுத்திவிடு, மறவாதே.

167. ஏ மனமே! உனது நிஜஸ்வரூபம் மெய்யாகும் மாயையின் நிஜஸ்வரூபம் பொய்யாகும், மறவாதே.

168. ஏ மனமே! குணமெல்லாம் உனது மனத்தினிடமே உளது, மறவாதே.

169. ஏ மனமே! நல்ல சிந்தனை உள்ளவனின் மனத்தில் குழப்பமிருது, மறவாதே.

170. ஏ மனமே! தைரியமற்றவனே பாவி, மறவாதே.

171. ஏ மனமே! நீ விரும்பியபடி இருந்து வரலாம் ஜாக்ரதை, மறவாதே.

172. ஏ மனமே! உலகில் இருந்தவரும் மனிதனுடைய இதயத்தையே கடவுள் தனக்கு இருப்பிடமாக்கிக் கொண்டுள்ளதை நீ மறவாதே.

173. ஏ மனமே! நீ உயிர் வாழ்ந்திருப்பது உன்னையே நீ ''நான் யார்'' எனக்கேட்டுணர்வதற்காகும், மறவாதே.

174. ஏ மனமே! நீயும் கிளிப்பிள்ளை போல் வாழ்ந்து வராதே, ஜாக்ரதை.

175. ஏ மனமே! தன்னம்பிக்கை உடையவர்களோடு உறவாடு, மறவாதே.

176. ஏ மனமே! நீயும் ஒரு உண்மையான தியாகி என்கிறதை இம்மையில் உனது அந்தராத்மா சொல்லும்படி நடந்து கொள், மறவாதே.

177. ஏ மனமே! தத்வ ஞானிக்குள் மற்ரெருவன் இருந்து வரமுடியாது, ஜாக்ரதை.

178. ஏ மனமே! அற்ப விஷயங்களில் உன்மனத்தைச் செலுத்துவாயானல் அற்பத்தனமே உனக்குள் மேவிடும் ஜாக்ரதை.

179. ஏ மனமே! ஆசையற்றவனே நல்ல மனிதனுக இருந்து வரமுடியும், மறவாதே.

180. ஏ மனமே! விரும்புகிறவன் மனிதன்; விருப்பத்தை முற்றிலும் துறந்தவன் மாமனிதன்.

181. ஏ மனமே! பிறர் அறியாமல் தர்மம் செய்பவனுக்கே மன அமைதி கிட்டும்,

மறவாதே.

182. ஏ மனமே! பெண்களைத் தாயாக நம்பிவிடு நல்ல தனத்தும் உன்னைத் தேடி வரும், மறவாதே.

183. ஏ மனமே! பெண்களை நல்லவர்களாக்குவதற்கு ஆண்களிடமே அந்த சக்தி உளது, மறவாதே.

184. ஏ மனமே! தாயினிடம் பழகுவதைப் போல் தெய்வத்திடம் பழகமுடியாது, மறவாதே.

185. ஏ மனமே! உழைப்பவனே ஆரோக்கியத்துடன் சந்தோஷமாக இருந்து வருவன், மறவாதே.

186. ஏ மனமே! நியாயத்தை நம்பு அநியாயத்தை அறவே விட்டு விடு, மறவாதே.

187. ஏ மனமே! உனக்கு நன்கு தெரிந்ததைச் செய், மறவாதே.

188. ஏ மனமே! உனது உடலும் உள்ளமும் அழுக்கற்றிருந்து வரட்டும், மறவாதே.

189. ஏ மனமே! முட்டாள் தூங்கிக் கொண்டு இருப்பதே நல்லது விழித்துக் கொண்டால் அனைவருக்குமே தொல்லை என்பதை மறவாதே.

190. ஏ மனமே! ஸங்கல்பம் இல்லாமல் கல்மலைபோல் மனத்தை அசைவற்றிருந்து வரும்படி வைத்துக் கொள்கிறவனே ஜீவன் முக்தனாவன், மறவாதே.

191. ஏ மனமே! காற்றைக் கையினால் பிடித்து நிறுத்தி விடலாம், ஆனாலும் உனது மனத்தை

நிறுத்தி விடுவது கடினமாகும், ஜாக்ரதை.

192. ஏ மனமே! எண்ணங்களில் நல்லது கெட்டது இரண்டுமே பொய்யாகும். எண்ணங்கள் எதுவும் இல்லாமல் இருப்பவனே ஞானி, மறவாதே.

193. ஏ மனமே! ஆசைகளே மனத்தின் அழுக்காகும், மறவாதே.

194. ஏ மனமே! அனைத்திற்கும் உனது மனமே காரணம், ஜாக்ரதை.

195. ஏ மனமே! உன்னிடம் பரபரப்பு இருந்துவருமானால் தன்னிடம் பலவீனம் இருந்து வருகிறதென்பதை நீ மறந்து விடாதே.

196. ஏ மனமே! உனதிடமுள்ள மனோசக்தி உலகை விட மிகப்பெரியதாகும். நம்பு, மறவாதே.

197. ஏ மனமே! அன்போடு கருணை காட்டத் தெரிந்தவனே மனிதனுவன், மறவாதே.

198. ஏ மனமே! கடவுளின் பூர்ணமான சக்தி உனக்குள் இருப்பதாலேயே உன்னையும் நல்ல மனிதன் என்று அழைக்கிறார்கள், மறவாதே.

199. ஏ மனமே! போன பிறவியில் கழுதையாகப் பிறந்தவனே இப்பிறவியில் மந்த குணமுடைய மடையனுகப் பிறக்கிறான், மறவாதே.

200. ஏ மனமே! பிறரைக் குறை கூறுபவனிடம் நற்குணங்கள் இராது ஜாக்ரதை, மறவாதே.

201. ஏ மனமே! இம்மையில் உனது அறிவைப் பெருக்குவதுடன் அன்பைப் பெருக்கு, அதன்

பிறகு அழிவற்ற ஆனந்தம் உனக்குள் தானே பெருகும்.

202. ஏ மனமே! நல்லவர்களுடன் பேசு, முட்டாள்களைக் கண்டால் தூரவிலகிவிடு, மறவாதே.

203. ஏ மனமே! நீ இம்மையில் பிறரை அடிமையாக்கிக் கொள்ளாதே. நீயும் அடிமையாகி விடாதே, ஜாக்ரதை.

204. ஏ மனமே! உலகில் தொண்ணூற்றொன்பது பேர்கள் தனது முட்டாள்தனத்தினால் தன்னையே ஏமாற்றிக் கொள்பவர்களாகவே இருக்கிறார்கள் என்பதை நீ மறந்துவிடாதே.

205. ஏ மனமே! ஸதாகாலமும் பிரயாணம் செய்து கொண்டிருப்பதே உனது மனத்தின் வேலை. உனது வேலை சங்கல்பம் அற்றிருப்பதாகும் ஜாக்ரதை, மறவாதே.

206. ஏ மனமே! ஆசையற்றவன் ஒருவனே மனக்கலக்கம் இல்லாமல் இருந்து வரமுடியும், மறவாதே.

207. ஏ மனமே! பராசக்தியான அன்னை, உலகில் பெண் உருவம் தாங்கி உயிருடன் நடமாடி வருகிறாள் ஜாக்ரதை, மறவாதே.

208. ஏ மனமே! உன்னைப் பெற்ற தாயின் இதயமே கருணை நிறைந்த கடவுளின் கோவிலாகும் மறவாதே.

209. ஏ மனமே! என்னைப் பெற்ற தாயின் அளவற்ற அன்பைக் கூற ஆயிரம் நாவிருந்தாலும் போதாது.

210. ஏ மனமே! தூக்கமே சோம்பேறியின் தொழில் ஆகும். ஜாக்ரதை.

211. ஏ மனமே! நீ பெருமையோடு சிறப்புற வேண்டுமென்ருல் சிரத்தையும் பக்தியும் விடாமுயற்சியுமே உனக்குள் இருக்க வேண்டும், மறவாதே.

212. ஏ மனமே! யாதொரு முயற்சியும் இல்லாதவனே சோம்பேறியாவன் மறவாதே.

213. ஏ மனமே! உனது உடலுக்குள் கடவுள் இருப்பதால் அந்த உடல் புனிதமான திருக்கோவிலாகும் என்பதை மறவாதே.

214. ஏ மனமே! சொப்பனம் இன்றி உறங்கக்கற்றுக் கொள், மறவாதே.

215. ஏ மனமே! இன்பமும் துன்பமும் மனத்தின் மாயையாகும், ஜாக்ரதை.

216. ஏ மனமே! தன்னைத் தெரிந்து கொண்டவனுக்குப் பகைவனும் இருது, நண்பனும் இருது, மறவாதே.

217. ஏ மனமே! காமக்குரோதமும், பொய்யும் பேராசையுள்ளவனின் மனமும் நல்விஷயங்களில் ஈடுபடாது.

218. ஏ மனமே! தீயவற்றை (அறியாமை) ஒழிக்கவே கடவுள் உன்னை சிருஷ்டித்துள்ளான், மறவாதே.

219. ஏ மனமே! நல்லறிவுடன் அடக்கமும் பணிவும், அன்பும் இருப்பவனே மேலான உன்னத நிலைக்கு உயர்வான், மறவாதே.

220. ஏ மனமே! அக்ஞானி அழியக் கூடிய சொத்த

அனுபவிப்பன். ஞானி ஆத்மாவில் ரமிப்பன், மறவாதே.

221. ஏ மனமே! உயர்ந்த லட்சியம் இருப்பவனே மனிதனுவன், மறவாதே.

222. ஏ மனமே! உன்னுடன் அந்தரங்கமாகப் பழகிவரும் நண்பனிடம் பெரிய மனிதனைப் போல் நீ நடித்து வராதே, ஜாக்ரதை, மறவாதே.

223. ஏ மனமே! புஷ்பமாலைக்குள் தன்னை மறைத்துக் கொண்டுள்ள கயிறு போல் நீ இருந்து கொண்டு பணி செய்து வா மறவாதே.

224. ஏ மனமே! நீ முற்றிலும் ஆசையற்றிருக்க முடியுமாஞல் நீயே உலகில் சிறந்த பிரம்ம ஞானியாகிவிடுவாய், மறவாதே.

225. ஏ மனமே! பெண்களின் நிஜஸ்வரூபம் பிரம்ம சக்தியாகும், மறவாதே.

226. ஏ மனமே! உனது பரம்பரைச் சொத்து நீ தான் ''நான் யார்'' எனக் கேட்பாயாஞல் அந்த சொத்தாகவே நீயிருப்பதை உணர்வாய், மறவாதே.

227. ஏ மனமே! தாயை விலைக்கு வாங்கிவிட முடியாது, மறவாதே.

228. ஏ மனமே! சுறுசுறுப்போடு, கடமையை உண்மையாகச் செய்கின்றவனே பிரகாசிக்கிருன், மறவாதே.

229. ஏ மனமே! ஆசையுள்ளவனே கெட்டுப்போகிருன் மறவாதே.

230. ஏ மனமே! சிதறிய சிந்தையுள்ளவனின்

செயல் அனைத்துமே பயனற்றுப்போய்விடும், மறவாதே.

231. ஏ மனமே! நீ செய்துள்ள தவறுக்குத் தண்டனை உன்னைப் பற்றியுள்ள பெருநோய்களாகும் ஜாக்ரதை.

232. ஏ மனமே! சோம்பேறித்தன முள்ளவனையே அறியாமை தனக்கிருப்பிட மாக்கிக்கொண்டு விடுவதை நீ மறந்துவிடாதே.

233. ஏ மனமே! சர்க்கரையை நினைத்தவுடன் உனது நாவில் தித்திப்பின் ருசி தெரிந்துவிடுவதைப் போலவேதான் எல்லா நினைப்புகளின் விஷயமும் ஆகும் ஜாக்ரதை, மறவாதே.

234. ஏ மனமே! அனைவருடைய உள்ளத்திலும் அழிவற்ற கடவுளே அந்தர்யாமியாக இருந்து வருகிறார், மறவாதே.

235. ஏ மனமே! ஸ்வர்க்கம் வெளியில் இருப்பதாக நம்புகிறவன் அக்ஞானியாவன், மறவாதே.

236. ஏ மனமே! சந்தேகமுள்ளவனிடம் உள் அன்பு சுரக்காது, மறவாதே.

237. ஏ மனமே! பிரதிப் பிரயோசனத்தை எதிர்பாராத மலரின் மணம் போன்று நன்மைகளைச் செய்துவா, மறவாதே.

238. ஏ மனமே! உலகிலுள்ள ஆண்களுக்கும் பெண்களுக்கும் பொறுமையே ஆபரணமாகும், மறவாதே.

239. ஏ மனமே! நல்ல எண்ணம் உள்ளவனே மனிதனுவன் மறவாதே.

240. ஏ மனமே! உள்ளன்புடன் உறுதியோடு

கடமையைச்செய்து முடித்தவனே மகிழ்ச்சியுடன் இருந்து வரமுடியும், மறவாதே.

241. ஏ மனமே! உன்னையும் கடவுள் படைத்தது நீ சோம்பேறியாக இருப்பதற்கல்ல செயற்கரிய செயல்களை நீயும் செய்து கொண்டுவா, மறவாதே.

242. ஏமனமே! கல்மலைபோல் அசைவற்றிருக்கும் மனமுடையவனே ஆரோக்யமாக இருந்து வருவன், மறவாதே.

243. ஏ மனமே! நினைத்தவுடன் அதன் உருவமாகிவிடும், உனது மனத்தைக் கொண்டு கடவுளை நினைத்துவிடு, மறவாதே.

244. ஏ மனமே! உடம்பில் மட்டும் கற்பைக் காத்தால் போதாது. உனது உள்ளம் கற்புடையதாக இருந்து வரவேண்டும், மறவாதே.

245. ஏ மனமே! இதயமே உனது இருப்பிடம் அங்கே சென்று உன்னைத் தேடுவாயானல் ''நான் நான்'' என்று நீ இருப்பதை உணர்வாய், மறவாதே.

246. ஏமனமே! உனது தவறை நினைத்து நீ வெட்கப் படுவையாகுக, மறவாதே.

247. ஏ மனமே! ஸத்ஸங்கம் ஒன்றே தீய எண்ணங்களில் இருந்து உன்னை ரக்ஷிக்கும், மறவாதே.

248. ஏ மனமே! மௌனத்துடன் மஹத்தான காரியத்தை உறுதியாகச் செய்து விடமுடியும், மறவாதே.

249. ஏமனமே! ஆரோக்யமுள்ளவனே உலகிற்குப் பயன்படமுடியும், மறவாதே.

250. ஏமனமே! அலைபோல் மனம் இருக்குமானால் ஆழ்ந்த சிந்தனையிராது, அறிவிலும் உறுதியிராது, மறவாதே.

251. ஏ மனமே! மேடைப் பிரஸங்கம் ஸ்வர்க்கத்திற்குக் கொண்டு செல்லாது, ஜாக்ரதை, மறவாதே.

252. ஏ மனமே! நன்கு கஷ்டப்பட்டு உறுதியாக உழைப்பவனே அதிஷ்டமுள்ளவன், மறவாதே.

253. ஏ மனமே! உனது மனசாட்சி சொல்வதைக் கேட்டு நடந்து வருவாயானால் நீயும் மாமனிதனாகி விடுவாய் மறவாதே.

254. ஏ மனமே! உணவிற்காக வாழ்ந்து வராதே. உன்னை உனது உடம்பிற்குள் கண்டு கொள்ள வாழ்ந்து வா, மறவாதே.

255. ஏமனமே! முதலில் நீ உனது மனசாட்சியாகிய கடவுளுக்கு அஞ்சி நடந்து கொள் மறவாதே.

256. ஏ மனமே! மனசாட்சி சொல்வதைக் கேட்பவனிடமே மன அமைதியும், அன்பும், நேர்மையும் உண்மையும் இருக்கும், மறவாதே.

257. ஏ மனமே! மனசாட்சியை மறைப்பவனின் மனம் ஸதாகாலமும் களங்கமுள்ளதாகவே இருக்கும், மறவாதே.

258. ஏ மனமே! பொய்யாக இருந்துவரும் உலகங்கள் எல்லாவற்றையுமே

ஸொப்பனமென்று நம்பி மறந்துவிடு. மறவாதே.

259. ஏ மனமே! உனது இதயமே கடவுளின் கோவிலாகவே இருப்பதால் அதனை உனது கெட்ட எண்ணங்களால் பாழ் செய்துவிடாதே, ஜாக்ரதை.

260. ஏ மனமே! நான் நல்லவனு, நன்மை செய்துள்ளேனு என்று உனது மனச் சாட்சியிடம் கேட்டால் உனது உண்மை தெரிந்துவிடும், மறவாதே.

261. ஏ மனமே! உன்னிடம் இருந்து கெட்ட எண்ணத்துடன் வெளிவரும் சொல் கொடிய விஷயமானதாகும் ஜாக்ரதை, மறவாதே.

262. ஏ மனமே! எப்படிப்பட்ட மனிதனையும் மனம் ஏமாற்றிவிடும் ஜாக்ரதை, மறவாதே.

263. ஏ மனமே! ஆத்ம சக்தியின் குரலேதான் மனச்சாட்சியின் குரலாகும், மறவாதே.

264. ஏ மனமே! உனது மனச் சாட்சிக்கு நீ அஞ்சி நடந்து வருவாயானுல் தெய்வங்களும் உன்னைக் கண்டு அஞ்சுவார்கள், மறவாதே.

265. ஏ மனமே! மனசாட்சியின் சொல்படி கேட்பவன் ஒருவனையே தேவர்கள் மாமனிதர்கள் எல்லோரும் இடைவிடாமல் போற்றி வருவார்கள், மறவாதே.

266. ஏ மனமே! நீ இம்மையில் தூய்மையுடன் பிரகாசித்து வரவேண்டுமென்றுல் மனசாட்சி சொல்வதொன்றையே கேட்டு நடந்துவா, மறவாதே.

267. ஏ மனமே! கனவில் கண்டதை பிறரிடம் சொல்வதால் நீ கேள்விக் குரியவனுகி விடலாம் ஜாக்ரதை மறவாதே.

268. ஏ மனமே! ''நான் யார்'' என உனக்குள் கேட்பாயானுல், உனது நெஞ்சில், அழிவற்றிருந்து வரும் மெய்ப்பொருளாகவே நீ இருப்பதை உணர்வாய், மறவாதே.

269. ஏ மனமே! உனது இதயத்தை கெடுப்பது ஆசையாகும் நம்பு, மறவாதே.

270. ஏ மனமே! தனக்குள் வெட்கக் கேடான நினைவை வைத்துக்கொண்டு பக்தனைப்போல வேஷம் போடுவதை எல்லாம் உன் நெஞ்சம் நன்கறியும், ஜாக்ரதை.

271. ஏ மனமே! அருவருப்பை உண்டாக்கும் பேச்சுள்ளவனிடம் முன்ஜாக்ரதையுடன் பழகிவா, மறவாதே.

272. ஏ மனமே! உலகத்தில் இருந்து வரும் தெய்வத்தின் ஆற்றல்கள் எல்லாம் உனக்குள் இருப்பதை நம்பு, மறவாதே.

273. ஏ மனமே! நீ மனசாட்சி சொல்வதை கேட்டுத் திருந்தாவிடில் உன்னைக் கடவுளாலும் திருத்த முடியாது, மறவாதே.

274. ஏ மனமே! இன்பத்தின் இருப்பிடம் ஆன்மாவாகும். ஆன்மாவின் குரலே மனச்சாட்சியின் குரலாகும், மனச்சாட்சியின் சொல்படி நடப்பவனே மாமனிதனுவன், மறவாதே.

275. ஏ மனமே! பிறருக்கு உனது உண்மை தெரியாது போகலாம், அவைகளை

உன்னுடைய நெஞ்சு நன்கு அறியும் என்பதை மறந்துவிடாதே.

276. ஏ மனமே! இன்பத்தையும், துன்பத்தையும் அனுபவிப்பது யார் ''நான் யார்'' என உனக்குள் கேட்பதே உனது முதல் தரமான கடமையாகும் மறவாதே.

277. ஏ மனமே! அருட்செல்வமொன்றே குறையாததாகும். அது உனக்குள் இருக்கிறது, மறவாதே.

278. ஏ மனமே! முற்றிலும் சிந்தனையற்றவனே (ஸங்கல்பமற்றவனே) ஜீவன் முக்தனுவன் மறவாதே.

279. ஏ மனமே! பிறரிடம் அன்போடு பிரியமாகப் பேசும் பேச்சு எதிரொலிக்கும் மறவாதே.

280. ஏ மனமே! உலகில் தெரியும் பொய்ப் பொருளான நாமரூபத்தின் தோற்றத்தை நம்புவது அக்ஞானமாகும். மறவாதே.

281. ஏ மனமே! நீ தவறு செய்வாயாயின் உடனடியாக உன்னைக் கண்டிப்பது உனக்குள் இருக்கும் மனச்சாட்சியாகும், மறவாதே.

282. ஏ மனமே! உண்மையான தவம் மனத்தை மௌன மாக்கிக்கொண்டு விடுவதாகும், மறவாதே.

283. ஏ மனமே! மனச்சாட்சி சொல்வதைக் கேளாவிட்டால் உனக்குள் கடல் அலைபோல் ஓயாத கவலை உண்டாகிவிடும், ஜாக்ரதை.

284. ஏ மனமே! மனச்சாட்சி என்பது கடவுளின் குரலாகவே இருப்பதால் அதை

உண்மையாகக் கேட்டு நடப்பவன் ஒருவனே சத்யத்தை மீறமாட்டான், மறவாதே.

285. ஏ மனமே! முப்பத்து முக்கோடி தெய்வங்களில் சக்தியையும் உண்மையான மனத் தூய்மையுள்ளவனிடமே காண முடியும், மறவாதே.

286. ஏ மனமே! ஸத்சங்கம் ஒன்றே உனது இதயத்தை மகத்தானதாக்க முடியும்.

287. ஏ மனமே! நீ நல்லறிவுமிக்க உத்தமனுகிவிட உனக்குள் சென்று ''நான் யார்'' எனக்கேள் மறவாதே.

288. ஏ மனமே! சிருஷ்டிப்பதும், காப்பதும், அழிப்பதும் மனத்தின் வேலையாகும், ஜாக்ரதை.

289. ஏ மனமே! உனது கடமை நல்லதைச் சிந்திப்பதேயாகும், மறவாதே.

290. ஏ மனமே! உனது வாக்கில் மதுரம் இருப்பின் கேட்பவர்கள் உள்ளம், பூரித்து ஆனந்தமடையும், மறவாதே.

291. ஏ மனமே! முதலில் ''நான் யார்'' என நீ தெரிந்து கொண்ட பிறகு ஜெபத்தியானங்களே உறுதியாகச் செய், மறவாதே.

292. ஏ மனமே! மனச்சாட்சியின் குரல் கடவுளின் குரலாக இருப்பதால் சத்யமாக நம்பிவிடு மறவாதே.

293. ஏ மனமே! மனச்சாட்சி சொல்வதை வெறுப்பவன் ஆசையினுல் அல்லல்பட்டுமடிவன், மறவாதே.

294. ஏ மனமே! பேராசையும், பொருமையும் தீராத நோயாகும், நம்பு மறவாதே.

295. ஏ மனமே! உலகில் மனச் சாட்சி சொல்வதொன்றையே சத்யமாகக்கேட்டு நடப்பவன் ஒருவனே உலகில் மிகப்பெரும் பாக்யசாலியான புண்யபுருஷனுவன், மறவாதே.

296. ஏ மனமே! ஸதாகாலமும் மனத்தூய்மையுடன் இருப்பவனே மஹாத்மா என்பதை, மறவாதே.

297. ஏ மனமே! ''நான் யார்'' என உண்மையைக் கண்டு கொண்டவுடன் நீ அதனுடன் ஒன்றுபட்டு இரண்டறக் கலந்துவிடுவாய், மறவாதே.

298. ஏ மனமே! நீ இம்மையில் நல்லவனுகிவிட உறுதியெடுத்துக் கொண்டுவிடு, மறவாதே.

299. ஏ மனமே! பிறருக்குத் தீமை தருவது எதுவானுலும் சரி அதைப்பார்த்துக் கொண்டிராதே. அது உனக்கும் தீமையைத்தரும் நம்பு, மறவாதே.

300. ஏ மனமே! சிந்தனை மோசமாக இருப்பவனின் வாழ்நாள் மோசமாகிவிடும், மறவாதே.

301. ஏ மனமே! உனது நாக்கை முன்ஜாக்ரதையுடன் அடக்கி வைத்துப் பேசு, ஜாக்ரதை.

302. ஏ மனமே! உண்மையான நீதிமன்றம் உனது மனச்சாட்சியாகும், நம்பு மறவாதே.

303. ஏ மனமே! தேவாதிதேவர்களாக இருப்பினும்

மனச்சாட்சிக்கு பயந்து நடந்தாக வேண்டும், மறவாதே.

304. ஏ மனமே! மனச்சாட்சி சொல்வதைக் கேட்கும் உன்மனமே நேர்மையுடன் கூடிய உண்மையான மனமாகும், மறவாதே.

305. ஏ மனமே! மனச்சாட்சியை மறைப்பவனிடம் நேர்மையும் இருது, மகிழ்ச்சியும் இருது, மறவாதே.

306. ஏ மனமே! முற்றிலும் மனத்தூய்மையுடன் இருந்து வர ஒரேவழி நிராசையுடன் இருந்து வருவதொன்றேயாகும்.

307. ஏ மனமே! ஆசைகள் எல்லாம் ஒன்று சேர்ந்து அழுக்காகியவுடன் உன்னை மிகக்கொடிய பாவியாக்கிவிடுகிறது, ஜாக்ரதை, மறவாதே.

308. ஏ மனமே! பிறரைப் பார்ப்பதற்கு முன்பே உன்னை நீ பார்த்துக் கொண்டுவிடு, மறவாதே.

309. ஏ மனமே! ''நான் யார்'' எனக்கேட்கும் ஆராய்ச்சி ஒன்றே ஞானனுபவத்தை உனக்குள் உண்டாக்கும், மறவாதே.

310. ஏ மனமே! ஞானனுபவம் வந்தவுடன் வேற்றுமைகள் எல்லாம் அறவே மறந்து போய்விடும், மறவாதே.

311. ஏ மனமே! இனிமையான சொல் குயில் போன்றது. வன் சொல் காக்கை போன்றதென்பதை மறவாதே.

312. ஏ மனமே! கடவுள் மனச்சாட்சியாகவே இருந்து வருவதை, நம்பு மறவாதே.

313. ஏ மனமே! நீ திரை மறைவில் செய்து வரும்

தவறுகளேயும் உனக்குள்ளிருக்கும் மனச்சாட்சி ஒன்றே நேரடியாகக் கண்டுகொண்டு அதைக்குறித்தும் வைத்துக்கொண்டுவிடுவதை மறவாதே, ஜாக்ரதை.

314. ஏமனமே! மனச்சாட்சியை மறைப்பவனிடம் பதட்டமும், பொய்யும், கோபமும், பகையும் நிரந்தரமாக குடியேறிவிடும், ஜாக்ரதை, மறவாதே.

315. ஏ மனமே! முக்திக்கு முதல்படி மனச்சாட்சி சொல்வதை முழு மனத்துடன் கேட்பதாகும், மறவாதே.

316. ஏ மனமே! கனவானது விழித்துக் கொண்டவுடன் முற்றிலும் பொய்யாகி விடுகிறதைப் போன்றதே உனது கற்பனேயும் நீ கண்டுவரும் உலகமும் ஆகும், மறவாதே.

317. ஏமனமே! கடவுள் இருக்கும் இடத்தை கண்டு பிடித்தாகி விட்டது அந்த இடம் உனது இதயத்திற்குள் இருக்கும் ஆத்மாவாகும் நம்பு மறவாதே.

318. ஏ மனமே! பிறரை நினேத்து வருபவன் பாபியாவன், மறவாதே.

319. ஏ மனமே! ஆசைகள் உன்னேச் சிறுமைப் படுத்திவிடுவதோடு உன்னேச் சிறிய மனிதனுக்கி விடும், ஜாக்ரதை, மறவாதே.

320. ஏ மனமே!, உனது உறுதியான கருத்தின்படிதான் உன்னுடைய வாழ்க்கையும் இருந்து வரும். ஜாக்ரதை, மறவாதே.

321. ஏ மனமே! தீயினுல் சுட்டாலும் பரவாயில்லே நாவினுல் மட்டும் சுட்டுவிடாதே, ஜாக்ரதை.

322. ஏ மனமே! மனச்சாட்சி சொல்கிறபடி கேட்பவன் உடம்பும், உள்ளும் ஆரோக்கியமாக இருக்கும் மறவாதே.

323. ஏ மனமே! ஒருவரும் அறியாமல் மறைந்து செய்துவரும் குற்றத்தையெல்லாம் உனது மனச்சாட்சியிடமிருந்து நீ மறைத்து விடமுடியாது, ஜாக்ரதை, மறவாதே.

324. ஏ மனமே! உனக்கு உண்மையான அமைதி வேண்டுமென்றுல் மனச்சாட்சியின்படி உறுதியாக நடந்துவா.

325. ஏ மனமே! உன்னேச்சிருஷ்டித்த இறைவனின் விருப்பம் உனது மனச்சாட்சிபடி நீ நடக்க வேண்டுமென்பதொன்றேயாகும், மறவாதே.

326. ஏ மனமே! ஆக்குகிறவன் யார், அழிக்கிறவன் யார் ''நான் யார்'' என்பதை முதலில் தெரிந்து கொண்டுவிடு மறவாதே.

327. ஏ மனமே! பொறுமையாக இருப்பதுவே மிகப்பெரிய ஸாதனமாகும் என்பதை நம்பு, மறவாதே.

328. ஏ மனமே! குரு உபதேசம் ஒன்றையே செய்வர் அதைச்சிந்தித்துப் பேரின்பத்தை அனுபவிப்பது உனது வேலேயாகும், மறவாதே.

329. ஏ மனமே! ஸந்தேகமே மனிதகுலத்தின் சத்ருவாகும், மறவாதே.

330. ஏ மனமே! பேசத்தெரியாமல் பேசுவாயானுல்

கேட்பவர்கள் உன்னைக் கேவலப்படுத்துவதுடன் முட்டாள் பட்டத்தையும் தந்துவிடுவார்கள், ஜாக்ரதை, மறவாதே.

331. ஏ மனமே! கடவுளே உனக்குள் மனச் சாட்சியாக இருந்துகொண்டு பேசுகிறார். அவர் சொல்வதை முழு மனத்துடன் கேட்டு அதன்படி நடந்துவா, மறவாதே.

332. ஏ மனமே! கடவுளானவன் உனது இதயத்திற்குள் மனச் சாட்சியாகவே இருந்துவருவதால் அவர் நீ மறைவில்செய்து வரும் நேர்மையற்ற செயல்களை எல்லாம் உடனுக்குடன் உன்னிடம் குத்தி காட்டுவர் மறவாதே.

333. ஏ மனமே! தனக்குள்ளிருக்கும் மனச்சாட்சியை மறந்துவிட்டவனிடம் ஒழுக்கமும் இராது நேர்மையும் இராது. நற்குணம் அடியோடு மறைந்து போகும் ஜாக்ரதை, மறவாதே.

334. ஏ மனமே! மனச்சாட்சியின் விருப்பப்படி நடப்பவனே நல்ல மனிதன், மறவாதே.

335. ஏ மனமே! சித்துகள் அக்ஞானிகளிடமே இருந்து வரும் என்பதை நீ மறந்துவிடாதே.

336. ஏ மனமே! தன்னம்பிக்கை இல்லாத வழிபாடும் ப்ரார்த்தனையும் ஜபஹோமமும் பயன்தராது, ஜாக்ரதை.

337. ஏ மனமே! நேர்மையுடன் ஒழுக்கத்தோடு பொறுமையாக இருந்து வருவாயானால், உனது மனச்சாட்சியாகிய கடவுள், உன்னைப்

பெருமைப்படுத்திவிடுவன், மறவாதே.

338. ஏ மனமே! யோசித்து பேசுகிறவன் வருந்த மாட்டான் ஜாக்ரதை, மறவாதே.

339. ஏ மனமே! உணரவேண்டிய உனது ஆன்மாவை உனது கண்களால் பார்க்க முடியாதென்பதை மறவாதே.

340. ஏ மனமே! இதமாக மட்டும் பேசினுல் போதாது உண்மையைப் பேச வேண்டுமென்பதை மறவாதே.

341. ஏ மனமே! பிறர் உன்னை என்ன நினைக்கிருர்கள் என்று நீ கவலைப்படவேண்டாம் உனது மனச்சாட்சி என்ன சொல்கிறதென்பதை உன்னிப்பாக காதைக் கொடுத்துக்கேள், மறவாதே.

342. ஏ மனமே! மனச்சாட்சி சொல்கிறபடி கேட்பதையே நீ செய்துவரும் தவமாக்கிக் கொண்டுவிடு மறவாதே.

343. ஏ மனமே! கற்பனை இருக்கும் வரை கனவும் இருந்துவரும், மறவாதே.

344. ஏ மனமே! நினைத்துவரும் இறைவனை ஏமாற்றி விடலாம் உனது மனச்சாட்சியை மட்டும் ஏமாற்றிவிட முடியாது, ஜாக்ரதை.

345. ஏ மனமே! இதயபூர்வமாகப் பிறருடன் பழகி வருவையானுல் அனைவருமே உன்னிடம் உள்ளன்போடு பழகிவருவார்கள், மறவாதே.

346. ஏ மனமே! அன்பு ஆராய்ச்சிக்குரியதல்ல அனுபூதியினுல் உணரக்கூடியதாகும், மறவாதே.

347. ஏ மனமே! பலஹீனத்தை உண்டாக்குவது உணர்ச்சியாகும், மறவாதே.

348. ஏ மனமே! தெரிந்துகொள்ள வேண்டியதைத் தெரிந்துகொண்டு விட்டவன் பேசமாட்டான்.

349. ஏ மனமே! நீ செய்துள்ள தியாகம் உண்மைதானு என்பதை உனக்குள் இருக்கும் மனச்சாட்சியிடம் கேட்டறிந்துகொள், மறவாதே.

350. ஏ மனமே! கோவில் என்பது உனது இதயமாகும் கோவிலுக்குப் போய் வந்தேன் என்று சொல்லி உன்னை நீயே ஏமாற்றிக்கொள்ளாதே ஜாக்ரதை, மறவாதே.

351. ஏமனமே! குறைவற்ற இன்பம் இருக்குமிடம் அன்பாகும், மறவாதே.

352. ஏமனமே! முதலில் நீ உண்மையாகச் சிந்திக்க வேண்டியது ''நான் யார்'' என்பதேயாகும், மறவாதே.

353. ஏ மனமே! அகத்துள் உணரவேண்டிய உணர்ச்சியை விலை கொடுத்து வாங்க முடியாது, மறவாதே.

354. ஏமனமே! பிறரை மகிழ்விக்க கூடிய அழகிய பேச்சில் உண்மையான அன்பைக் காணமுடியாது, மறவாதே.

355. ஏ மனமே! அன்புமயமாகிவிடுகிறவனிடம் அச்சம் இருாது. மறவாதே.

356. ஏ மனமே! பிடிவாதக்காரனிடம் கோபம் குடியிருப்பதால் சிந்தனுசக்தியிராது என்பதை

மறவாதே.

357. ஏ மனமே! எல்லோரிடத்திலும் தர்க்கம் செய்துவிடாதே. ஜாக்ரதை, மறவாதே.

358. ஏ மனமே! உன்னிடம் இருந்து நல்ல வார்த்தை ஒன்று வெளிவருமானல் அதுவே போதுமானது, மறவாதே.

359. ஏ மனமே! சிந்தனை மேலானவையாக இருப்பின் மேன்மகனுகி விடமுடியும், மறவாதே.

360. ஏ மனமே! உனது பேச்சில் இருந்தே நன்மையும் தீமையும் பிறக்கின்றன ஜாக்ரதை, மறவாதே.

361. ஏ மனமே! புண்ய புருஷனிடம் நல்ல சிந்தனை இருக்கும், மறவாதே.

362. ஏ மனமே! உனது பேச்சில் சத்யம் இருக்கவேண்டும், ஜாக்ரதை, மறவாதே.

363. ஏ மனமே! ஞானத்தை உண்டாக்காத படிப்பு பாலைவனத்தில் பெய்த மழையைப் போன்றதாகும், மறவாதே.

364. ஏ மனமே! ஞானுனுபவம் இல்லாத வேதாந்தி மலடியைப் போன்றவனுவன், மறவாதே.

365. ஏ மனமே! உன்னைப் பார்ப்பவர்கள் இவன் ஒரு ஞானசூன்யம் என்று சொல்லும்படி நீ இருந்து வராதே ஜாக்ரதை.

366. ஏ மனமே! உண்மையான அன்பிற்கே உலகில் மதிப்புண்டு, மறவாதே.

367. ஏ மனமே! உன்னிடம் விலை உயர்ந்த

வஸ்துக்கள் இருப்பதால் மட்டும் நீ பெரிய மனமுடையவனுகி விடமாட்டாய், மறவாதே.

368. ஏ மனமே! எவன் அறிவற்ற முட்டாளோ அவன் பொய் பேசி இன்பமடைவான், மறவாதே.

369. ஏ மனமே! உனது முகத்தின் அழகிலிருந்து அகத்தின் அழகைத் தெரிந்து கொண்டு விடமுடியும், மறவாதே.

370. ஏ மனமே! நீ சொல்லும் ஒவ்வொரு பொய்யும் நீ சேர்த்துவைத்துள்ள புண்ணியத்தைக் கொள்ளேயடித்துக்கொண்டுச் செல்கிறது என்பதை மறவாதே.

371. ஏ மனமே! மக்களை நல்லவர்களாக்க நல்ல நீதி மன்றங்கள் அவசியம் தேவையாகும், மறவாதே.

372. ஏ மனமே! கோபமுள்ளவர்கள் நீதிபதிப் பதவியை ஏற்பதால் அவர்கள் பாவத்தைத் துணிந்து செய்து ஆகவேண்டும், மறவாதே.

373. ஏ மனமே! ஏழைகளுக்காக இருந்து வரும் நீதி மன்றம் ஒன்று கூட இருந்ததும் இல்லை, இருக்கப்போவதும் இல்லை மறவாதே.

374. ஏ மனமே! கண்களால் பார்த்ததை மட்டும் நம்பு. அதை தீர்க்காலோசனை செய்து சொல்ல வேண்டியவர்களிடம் மற்றும் சொல் மறவாதே.

375. ஏ மனமே! ஞான விசாரம் செய்கிறவன் முகம் கவலையற்று அழகாக இருக்கும், மறவாதே.

376. ஏ மனமே! நல்ல அறிவுடையவன் அவதூறு பேசமாட்டான், மறவாதே.

377. ஏமனமே! இதயம் நல்லதாக இருக்குமானால், அன்பும் கூடவே இருக்கும், மறவாதே.

378. ஏ மனமே! போலிகளை நம்பாதே ஜாக்ரதை, மறவாதே.

379. ஏ மனமே! ஞானமற்ற உன்னை உன்னிடம் தானம் வாங்குகிறவர்கள் குபேரன், கொடை, வள்ளல் என்று மட்டும், உன்னைச் சொன்னால் போதுமா, ஜாக்ரதை.

380. ஏ மனமே! ஞான வைராக்ய மற்ற சன்யாசம் யாதொரு பலனையும் கொடுக்காத மரத்தைப் போன்றது மறவாதே.

381. ஏ மனமே! நீ செய்து வரும் தொண்டு உண்மையாக இருக்குமானால் உனக்குள் உன் ஒளியாகவே இறைவன் காட்சி தருவன் மறவாதே.

382. ஏ மனமே! அச்சம் இருப்பவன் நீதிபதிபதவிக்கு லாயக்கற்றவன் மறவாதே.

383. ஏ மனமே! சட்டம், தவறு செய்தவனைக் கசக்கிப் பிழிந்து விடும் ஜாக்ரதை, மறவாதே.

384. ஏ மனமே! நிரபராதியை குற்றவாளியாக்குவதைக் கடவுளும் மன்னிக்கமாட்டார்.

385. ஏ மனமே! செயற்கை அழகு மணிக்குமணி குறைந்துகொண்டே இருக்கும், மறவாதே.

386. ஏ மனமே! கடன்வாங்கி சுகம் அனுபவிப்பதைக் காட்டிலும்

பிச்சையெடுத்து வாழ்வதே மேல், மறவாதே.

387. ஏ மனமே! உனதுள்ளத்தில் பாவக்கறை படியாதபடி பார்த்துக்கொள், மறவாதே.

388. ஏ மனமே! ஞானுனுபவ முள்ளவனுக்கு விரோதிகள் இருக்கமுடியாது, மறவாதே.

389. ஏ மனமே! மனிதாபிமானமற்றவனே கொடிய தீண்டத்தகாத நீசனுவன், மறவாதே.

390. ஏ மனமே! நல்ல அறிவும், அனுஷ்டானமும், சுறுசுறுப்பும் இல்லாத சன்யாசி ஒன்றுக்கும் உதவாத குப்பையைப் போன்றவனுவன், மறவாதே.

391. ஏ மனமே! நன்றி கெட்டவனுக்குச் செய்துவரும் உபகாரம் நல்லபாம்பிற்குப்பால் கொடுத்து வளர்ப்பதைப் போன்றதாகும் ஜாக்ரதை, மறவாதே.

392. ஏ மனமே! பூமியைப் போல் பொறுமையுள்ளவனே நீதிபதியாக வரவேண்டும், மறவாதே.

393. ஏ மனமே! சட்டம் ஒரு மாயை. அது ஞானமிருப்பவனைக்கண்டு விலகி ஓடிவிடும், மறவாதே.

394. ஏ மனமே! உனக்கு நல்ல அழகைக் கொடுப்பது ஞானமாகும், மறந்துவிடாதே.

395. ஏ மனமே! இயற்கை அழகை ரசிக்கத் தெரியாதவன் செயற்கை அழகை விரும்பி ரசிக்கிறுன்.

396. ஏ மனமே! அக்ஞானிகளாகிய

முட்டாள்களிடமே பணம் நிறைந்திருக்கும் அவர்களிடம் நீ ஜாக்ரதையாகப் பழகிவா, மறவாதே.

397. ஏ மனமே! கெட்ட எண்ணமுடையவனை நம்பாதே. ஜாக்ரதை.

398. ஏமனமே! முட்டாள்களின் சிநேகம் ஆபத்தை உண்டாக்கி விடும், மறவாதே.

399. ஏ மனமே! ஞான விசாரமில்லாத சன்யாசி கதவில்லாத பாழும் வீட்டைப் போன்றவனுவன் மறவாதே.

400. ஏ மனமே! ஞானமற்றவனையே உலக மக்கள் இவனே உண்மையான நீசன் என்பார்கள் மறவாதே.

401. ஏ மனமே! வழக்கை விசாரிக்கும் திறமையற்றவன் நீதிபதிக்கு லாயக்கற்றவனுவன், மறவாதே.

402. ஏ மனமே! ஞானமுள்ளவர்களுக்கு நீதிமன்றம் அவரவர்களுடைய மனச்சாட்சியேயாகும், மறவாதே.

403. ஏ மனமே! நல்ல எண்ணம் ஒன்றே நல்ல அழகை உண்டாக்கிக் கொண்டே இருக்கும், மறவாதே.

404. ஏ மனமே! தெய்வத்தை உண்மையாக நம்பி விட்டவனின் அழகிய தெய்வீக அருள் பிரகாசிக்கும், மறவாதே.

405. ஏ மனமே! படித்த முட்டாள்களுடன் கூடிவாழ்வதைக் காட்டிலும் படிக்காத முட்டாள்களுடன் வாழ்வதே நல்லது,

மறவாதே.

406. ஏ மனமே! உனக்குள் கடுகளவும் சந்தோஷத்தை உண்டு பண்ணுத புத்திசாலித்தனம் மட்டும் உன்னிடம் இருப்பதால் என்னபயன் சொல்? மறவாதே.

407. ஏ மனமே! முன் கோபக்காரனுடன் நெருக்கமாகப்பழகாதிருப்பதே நல்லதாகும். ஜாக்ரதை, மறவாதே.

408. ஏ மனமே! உணர்ச்சியுள்ளவனுக நீ இருந்து வா மறவாதே.

409. ஏ மனமே! சிந்தனையுடன் செயலில் உண்மையாக ஈடுபட்டு வா, மறவாதே.

410. ஏ மனமே! உன்னிடம் இருக்கும் வீம்பாலும், படபடப்பான பேச்சாலும் உனது நல்லகாரியமனைத்தும் அடியோடு கெட்டுவிடும், ஜாக்ரதை.

411. ஏ மனமே! ஆலோசனை செய்வதில் நல்ல திறமை உள்ளவனுன நீதிபதியிடம் உனது வழக்குகள் செல்லுமாஞல் உண்மை நிறைந்த நல்ல நீதிகிட்டும், மறவாதே.

412. ஏ மனமே! நியாயம் வழங்குகிறவர்களிடம் தாட்சண்யம் அணுவளவும் இருக்கக் கூடாது, மறவாதே.

413. ஏ மனமே! நற்குணம் ஒன்றே மிகுந்த அழகையும், மரியாதையும் உண்டாக்கும், மறவாதே.

414. ஏ மனமே! உடல் அழகு மட்டும் போதாது. அறிவிலும் ஆண்மையிலும் அழகு

பிரகாசிக்க வேண்டும், மறவாதே.

415. ஏ மனமே! போற்றுகிறவனை முழுவதும் நம்பி விடாதே, ஜாக்ரதை, மறவாதே.

416. ஏ மனமே! நீ இம்மையில் நம்பிக்கைக்குப் பாத்திரமாகிவிடு.

417. ஏ மனமே! பணம் நாட்டையும், வீட்டையும் உடலையும் அழகுபடுத்தும். உனது உள்ளத்தை அழகு படுத்த முடியாது, மறவாதே.

418. ஏ மனமே! கிளிப்பிள்ளையைப் போல் நீயும் இருதே, ஜாக்ரதை.

419. ஏ மனமே! சொத்தை வைத்துக் கொண்டிருப்பவனுக்கு அழகு, தர்மம் செய்வதில் தெரிந்துவிடும். மறவாதே.

420. ஏ மனமே! கோள் சொல்கிறவனின் மனம் மிகக் கொடிய விஷம் நிறைந்த செந்தேளைப் போன்றிருக்கும், மறவாதே.

421. ஏ மனமே! நன்கு ஆலோசனை செய்து நியாயம் வழங்கும் நீதிபதியே வள்ளல் ஆவன், மறவாதே.

422. ஏ மனமே! குற்றம் அதிகமாகும் போது நீதி மன்றங்களும் அதிகரித்துக் கொண்டே போகும், மறவாதே.

423. ஏ மனமே! நற்குணம் ஒன்றே மிகுந்த அழகையும், மரியாதையும் உண்டாக்கும், மறவாதே.

424. ஏ மனமே! இயற்கை அழகிற்கும் வர்ணம் பூசத் தேவையில்லை, மறவாதே.

425. ஏ மனமே! உன்னைத் தூற்றுகிறவர்கள் நீ செய்துள்ள பாபத்தை உன்னிடம் இருந்து பிடுங்கிச் செல்கிறார்கள், மறவாதே.

426. ஏ மனமே! பத்துரூபாய் கடன் கொடுப்பதைக் காட்டிலும் பத்துப்பைசாவை இனாமாகக் கொடுத்து விடுவதே மன நிம்மதி உண்டாக்கும் மறவாதே.

427. ஏ மனமே! சோம்பலே உனது முதல் சத்துரு மறவாதே.

428. ஏ மனமே! ஒழுக்கத்தைக் கெடுத்துக் கொண்டு உயிருடன் வாழ்ந்து வராதே.

429. ஏ மனமே! மனிதாபிமானம் உள்ளவனே பிறருக்கு உண்மையாக உதவி செய்வன், மறவாதே.

430. ஏ மனமே! பச்சாத்தாபத்துடன் அன்பும், அடக்கமும் இருப்பவனே மனிதனாவன், மறவாதே.

431. ஏ மனமே! பொய் சாட்சி சொல்கிறவன் குற்றவாளியாவன். நீதிமன்றத்தில் பொய் சொல்ல அனுமதிப்பவனே மிக்க கொடிய குற்றவாளியாவான், மறவாதே.

432. ஏ மனமே! சட்டம் மிகப்பயங்கரமான மாயையாகும். அதைக்கையாள வேண்டுமென்றால் உனக்கு ஞானம் அவசியம் வேண்டும், மறவாதே.

433. ஏ மனமே! உள்ளன்பு ஒன்றே உனது முகத்தை அழகு செய்யும், மறவாதே.

434. ஏ மனமே! பசியெடுத்தால் வர்ணம் பூசின

அழகு வாடி வதங்கி விடும், மறவாதே.

435. ஏ மனமே! முன்பு செய்த தீமைகளை அனுபவிக்கவே நீ பிறந்துள்ளாய், மறவாதே.

436. ஏ மனமே! இரவல் வாங்குவதினால் உனது மன அமைதி கெட்டுவிடும், மறவாதே.

437. ஏ மனமே! இருந்த இடத்திலிருந்து கொண்டு கடுகளவு நன்மையைச் செய்து விடுவதே உலகத்திற்கு நீ செய்து வரும் மேலான தர்மமாகும்.

438. ஏ மனமே! முன்ஜன்மத்தில் எருமையாகப் பிறந்தவனிடம் சுறுசுறுப்பும், பணிவன்பும், நல்லறிவும் இருது, மறவாதே.

439. ஏ மனமே! உலகில் இருந்து வரும் சுகபோகம் நிலையற்றதாகும் ஜாக்ரதை, மறவாதே.

440. ஏ மனமே! நீ யாருடன் வசிக்கிறாயோ அவருடைய குணமும் உனக்கும் வந்துவிடும், ஜாக்ரதை.

441. ஏ மனமே! நாட்டின் தலைவனுடைய செல்வாக்கில் நீதிமன்றங்கள் இயங்குமானால் நிர்த்தாட்சண்யமான நீதிகளை அங்கு காண முடியாது மறவாதே.

442. ஏ மனமே! நாட்டின் தலைவன் முதலில் தனது மக்களுக்கு சட்டத்தை மதிக்கக் கற்றுக்கொடுக்க வேண்டும், மறவாதே.

443. ஏ மனமே! அழகை உண்டாக்கும் சாதனங்களில் முதல்தரமானது நிராசையுடன் இருப்பதேயாகும், மறவாதே.

444. ஏ மனமே! எங்கெங்கே அழகுள்ளதோ அவை

அனைத்தும் மாயையாகும், மறவாதே.

445. ஏ மனமே! அதிகம் பேசுகிறவன் நல்லதைச் செய்து காட்ட முடியாது.

446. ஏ மனமே! சோம்பேறியாக நொடிப்பொழுதும் இராதே கெட்டுப்போவாய் ஜாக்ரதை, மறவாதே.

447. ஏ மனமே! வினயமற்ற மனிதன் மனிதகுலத்தின் பதருவன், மறவாதே.

448. ஏ மனமே! அறிவில்லாத மனிதன் உயிருடன் நடமாடும் நடைபிணமாவன், மறவாதே.

449. ஏ மனமே! உன்னிடம் அந்தரங்க சத்தி இருக்குமானுல் நீ செய்து வரும் ப்ரார்த்தனேக்கு உடனடியாகப்பலன் கிட்டும், மறவாதே.

450. ஏ மனமே! குறைகளேக்கண்டு நீ திருத்திக் கொண்டுவிடு, மறவாதே.

451. ஏ மனமே! சட்டம் மிகக்கொடிய விஷம் நிறைந்த பாம்பாகும். குற்றம் செய்வாயானுல் விஷக்கடிக்கு ஆளாவாய், ஜாக்ரதை, மறவாதே.

452. ஏ மனமே! உன்னிடம் இயற்கை அழகு இருக்கும் போது, அழகு செய்துகொள்ள எதையெல்லாமோ தேடுகிருயே இயற்கை அழகை நம்பு, மறவாதே.

453. ஏ மனமே! நீ அழகை ரசிக்கும் போது மாயையின் பிடியில் இருந்து வருவதை மறந்துவிடாதே.

454. ஏ மனமே! பேசாமல் உதவி

செய்துவருகிறவனே தொண்டனுவன், மறவாதே.

455. ஏ மனமே! தோற்றவனே மேலும் தீவிரமாகப் பாடுபட்டு ஜயிப்பான், நம்பு, மறவாதே.

456. ஏ மனமே! நீ தேடிவைத்துள்ள பொருள் உன்னுடன் வரப்போவதில்லை. யாசகனுக்காவது பயன்படும்படி செய், மறவாதே.

457. ஏ மனமே! அனுஷ்டானம் இல்லாதவனுக்கு அனுபூதி கிட்டாது, ஜாக்ரதை, மறவாதே.

458. ஏ மனமே! கோபத்தைக் கோபத்தால் போக்கிவிடமுடியாது, மறவாதே.

459. ஏ மனமே! ஞானமற்றவன் தனது உடலுக்குச் செய்து கொடுக்கும் அழகு சில மணி நேரமே அழகாக இருக்கும். ரோஜாப் பூவைப் போன்றதேயாகும், ஜாக்ரதை, மறவாதே.

460. ஏ மனமே! பொய்ப்பொருளை மக்கள் நம்பும்படி பேசுவதைக் காட்டிலும் மௌனமாக இருப்பதே நல்லது, மறவாதே.

461. ஏ மனமே! இவன் கடன்காரன் பாவி என்று உன்னைப்பிறர் கூருதபடி நடந்துகொள் மறவாதே.

462. ஏ மனமே! குடிகாரனுக்கு தர்மம் செய்வாயானுல் அவன் குடியைக் கெடுத்த பாவம் உனக்கு வந்து சேரும், ஜாக்ரதை.

463. ஏ மனமே! பாதுகாப்புடன் இருப்பவன் நஷ்டமடைய மாட்டான், மறவாதே.

464. ஏ மனமே! இறைவனிடம் தன்னைக்

கொடுத்துவிடுகிறவனே உண்மையான காணிக்கையைக் கொடுக்கத் தெரிந்தவனுவன், மறவாதே.

465. ஏ மனமே! அறிவு இருப்பினும், அற்பர்களைக் கனவிலும் நம்பிவிடாதே ஜாக்ரதை, மறவாதே.

466. ஏ மனமே! சென்றதை எல்லாம் உடனடியாக அறவே மறந்துவிடு.

467. ஏ மனமே! நல்ல அழகான ரோஜாச் செடியில் முள் இருப்பதைப் போல் மனிதனிடமும் குற்றம் இருந்து வரத்தான் செய்யும், மறவாதே.

468. ஏ மனமே! தவறை தவறென்று சொல். தெரியாததைத் தெரியாது என்றுசொல். தெரிந்ததைத் தெரியுமென்று சொல், மறவாதே.

469. ஏ மனமே! கோபமுள்ளவன் கவலைப்படுவான் கவலைப்படுகிறவன் சுகப்பட முடியாது, மறவாதே.

470. ஏ மனமே! பிறரை நன்கு புரிந்து கொண்ட பிறகு நண்பனுக்கிக் கொண்டு அவனிடம் பேசிவா, மறவாதே.

471. ஏ மனமே! நடுநிலைமை தவருதவனே மனிதன். அந்த நல்லவர்கள் வரிசையில் நீயும் வருவையாகுக மறவாதே.

472. ஏ மனமே! தன்னை புத்திசாலி என்று நினைத்துக் கொள்கிறவனே படித்த முழுமுட்டாள், மறவாதே.

473. ஏ மனமே! உனது உயிர் இருக்கும்போது உனக்கு மரியாதை கொடுத்து மதிக்காதவர்கள் நீ இறந்த பின் என்ன செய்வார்கள் தெரியுமா. நினைக்கவே மாட்டார்கள், மறவாதே.

474. ஏ மனமே! ஞானமுள்ளவனிடம் ஜாதி, தேசம், காலம் சமயமெல்லாம் சமமாகவே இருக்கும் மறவாதே.

475. ஏ மனமே! ஆன்மானுபவம் உள்ளவர்களின் அறிவுரை ஒன்றே உனக்கு ஆன்மானுபவத்தை உண்டாக்கும், மறவாதே.

476. ஏ மனமே! பிறரை நினைக்கும் அளவு கவலைகளும் அதிகரித்துக்கொண்டே இருக்கும், மறவாதே.

477. ஏ மனமே! எல்லாம் இருந்தும் அனுபவிக்கத் தெரியாதவன் துரதிருஷ்டமுடையவன் என்பதை மறவாதே.

478. ஏ மனமே! பொய் சொல்கிற கெட்ட பழக்கத்தை உடனடியாக நிறுத்திவிடு. இல்லையென்றால் பொய் சொல்லாமல் ஒரு நாள்கூட உன்னால் கழிக்கமுடியாது, மறவாதே.

479. ஏ மனமே! பகுத்தறிவுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் முதலில் தேவைப்படுவது கூர்ந்த அறிவும், வற்றாத முயற்சியும் குன்றாத உழைப்புமே அவசியமாகும், மறவாதே.

480. ஏ மனமே! எதிர்பார்ப்பவன் ஏமாறுவான் மறவாதே.

481. ஏ மனமே! தன்னைக் கெடுக்கும் எதையாவது

ஒன்றை நினைத்துக் கொண்டிருப்பவனுக்காகவே நாகம் இருந்து வருகிறதை மறவாதே.

482. ஏ மனமே! தனக்கு எல்லாம் தெரியும் என்று நினைப்பவனே ஆபத்தான மனிதன் மறவாதே.

483. ஏ மனமே! உனது உடல் மண்ணுகி விடப் போவதற்கு முன்பு நீ நன்றி உள்ளவனுகி விடு மறந்துவிடாதே.

484. ஏ மனமே! நெஞ்சம் புனிதமாகி விட்டால் அவனுக்கு உலகமே புனிதமாகத் தெரியும் மறவாதே.

485. ஏ மனமே! தூரத்தில் இருந்துகொண்டு ஸத்ஸங்கத்தைக் கேட்டாலும் உறுதியாக நீ பயனடைவாய், மறவாதே.

486. ஏ மனமே! இன்பத்தையும், துன்பத்தையும் வெறுத்து ஒதுக்கிவிடு சுகமாக இருப்பாய் மறவாதே.

487. ஏ மனமே! உண்மையான கருணையுடன் உன்னிடம் கொஞ்சம் கடுமையும் இருந்தால்தான் நிர்வாகத்தை சரிவர நடத்தவும் கவனிக்கவும் முடியும், மறவாதே.

488. ஏ மனமே! விளையாட்டிற்காகவும் போலித் தனமாக நடிக்காதே. போலித்தனம் செய்வது தொடருமாணுல் வாழ்க்கை கெட்டுவிடும், மறவாதே.

489. ஏ மனமே! ஆசையற்றவனிடம் வழக்குகளும் இருது விசாரணையும் இருது, மறவாதே.

490. ஏ மனமே! உனக்குப் பெருமை

வேண்டுமென்றால் விடாது முயற்சி செய்துவா மறவாதே.

491. ஏ மனமே! மனச்சாட்சியை நன்கு தெரிந்து நீ மனச்சாட்சி கூறுவதையே செய்துவிடு மறவாதே.

492. ஏ மனமே! எதற்கெடுத்தாலும் சிரிப்பவரகளை உண்மையாக நீ நம்பாதே.

493. ஏ மனமே! தன்னம்பிக்கையுடைய நீ பொறுமையைத் துணைவனுக்கிக்கொண்டு விடுவையானல் வெற்றி பெறுவாய்.

494. ஏ மனமே! கிளறிவிட்ட நெருப்பே ஜவலிக்கும். கிளறி விட்ட பூமியிலேயே விதைகளை விதைக்க முடியும். அங்ஙனம் உனது மனத்தை வேதாந்த விசாரத்தினுல் நீ கிளறி விட்டால்தான் அதனுள்ளிருந்து ஸ்வயம் பிரகாசமானது பிரகாசிக்கும் மறவாதே.

495. ஏ மனமே! பணம் இருப்பதினுல் உன்னிடம் எல்லோரும் பிரியமுள்ளவர்களாக இருந்து வருகிறுர்கள் என்பதை நீ மறவாதே.

496. ஏ மனமே! உனது குற்றத்தைச் சொல்கிறவனைப் போல் உனக்கு நல்லது செய்பவனை நீ காண முடியாது. அதனுல் அவனை மறவாதே.

497. ஏ மனமே! இரும்பினுல் செய்யப்பட்ட சுத்தியால் தங்கத்தை அடித்து நசுக்குவதால் சுத்தியலின் மதிப்பு உயர்ந்துவிடாது, மறவாதே.

498. ஏ மனமே! எது நேர்ந்தாலும் உனது மனம்

கல்மலே போல் அசைவின்றி இருந்துவரட்டும், மறவாதே.

499. ஏ மனமே! ஆசையிருக்குமானுல் சச்சரவுகளும் சங்கடமும் கூடவே இருந்து கொண்டிருக்கும்.

500. ஏ மனமே! உணர்ச்சியற்றவனுக்கு உபதேசம் செய்வதால் கேடே மிஞ்சும், மறவாதே.

501. ஏ மனமே! நியாயமானதையே மனச்சாட்சி கூறும் மறவாதே.

502. ஏ மனமே! நற்குணமுடைய அறிவாளிகள் மூடர்களேக் கண்டு அஞ்சுவார்கள், மறவாதே.

503. ஏ மனமே! நிலேயற்ற வாழ்க்கையை நம்பி விடுகிறவன் முழுமுட்டாள் என்பதை நம்பு, மறவாதே.

504. ஏ மனமே! அக்ஞானியின் அகத்துள் வேற்றுமைகள் குடியிருக்கும் அவனுக்காகவே நரகமும் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது, மறவாதே.

505. ஏமனமே! கர்வம் இருப்பின் எவருமே உன்னே மதிக்கமாட்டார்கள், ஜாக்ரதை.

506. ஏ மனமே! முதலில் உனக்குள் இருந்து வரும் பொருமையை ஒழித்து விடு நல்லவனுகி விடுவாய், மறவாதே.

507. ஏ மனமே! கல்மலேயானது இன்று வரை எத்தனே புயல்களே சமாளித்துக் கொண்டு அசைவற்று இருந்து வருவதைப்போல் நீயும் பொறுமையுடன் இருந்து வா மறவாதே.

508. ஏ !மனமே! சுபிட்சமாக வாழ்ந்து வருவதற்கு

ஒரே உபாயம் ''நான் யார்'' எனக்கேட்டு உணர்ந்து கொண்டுவிடுவதேயாகும் மறவாதே.

509. ஏ மனமே! தேவையற்றவனிடம் தெய்வத்தின் அருள் சுரக்கும் மறவாதே.

510. ஏ மனமே! எல்லோரையும் நேசித்து வா. நம்பவேண்டியவர்களை நம்பு. அனைவரையும் நம்பிவிடாதே, ஜாக்ரதை.

511. ஏ மனமே! கடவுளின் நல்ல எண்ணம் மனிதனும் இம்மையில் கடவுளாகிவிட வேண்டுமென்பதேயாகும் மறவாதே.

512. ஏ மனமே! அறிவில் தடித்தனமுள்ள மூடன் துணிந்து நல்ல அறிவாளிகளை முட்டாள் என்று சொல்லிவிடுவான், ஜாக்ரதை.

513. ஏ மனமே! உலகில் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்கிறவனுக்குக் கொடுப்பதற்காகவே முட்டாள் பட்டம் தயாராக காத்துக் கொண்டிருக்கிறதை நீ மறவாதே.

514. ஏ மனமே! முற்றிலும் வேற்றுமையற்றவனே முக்தனுவன். மறவாதே.

515. ஏ மனமே! ஆசையுள்ளவனைக் கண்டு தர்ம தேவதை பயந்து ஓடிவிடும், ஜாக்ரதை, மறவாதே.

516. ஏ மனமே! பொறுமைக்கு பூமியைக் குருவாக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

517. ஏ மனமே! பிறருடைய துன்பங்களைப் போக்குகிறவனே புண்ய புருஷனுவன், மறவாதே.

518. ஏ மனமே! இதமாகப் பேசுவாயானுல் உனக்கே வெற்றி மறவாதே.

519. ஏ மனமே! ஸத்துணவு உனது உடம்பைப் பலப்படுத்தும் ஸத்சங்கம் உள்ளத்தைப் பிரம்மமயமாக்கிவிடும் மறவாதே.

520. ஏ மனமே! கடவுளின் படைப்பில் ஏழை பணக்காரன் என்கிற வித்யாசம் இல்லே மறவாதே.

521. ஏ மனமே! தேசத்திற்குப் பயன்படாதவன் பூமிக்கு பாரமாவன், மறவாதே.

522. ஏ மனமே! போக்கிரியைத் திருத்தி விடலாம். பிடிவாத குணமடைய முட்டாளே திருத்தவே முடியாது, மறவாதே.

523. ஏ மனமே! நல்லவன் என்கிற பெயருடன் நீ ஒரு நாள் வாழ்ந்தாலும் போதுமானது, மறவாதே.

524. ஏ மனமே! கடுஞ்சினம் இருப்பின் அதுவே உனக்கு ஆபத்தை உண்டாக்கிக் கொன்றுவிடும் ஜாக்ரதை, மறவாதே.

525. ஏ மனமே! விஷமிகளுடன் எக்காரணத்தைக் கொண்டும் நீ சேராதே. ஜாக்ரதை.

526. ஏ மனமே! எந்த நினேப்புகளும் இல்லாமல் இருப்பவனே முற்றிலும் பரிசுத்தமானவன், மறவாதே.

527. ஏ மனமே! பிறரை நீ தூற்றுவாயானுல் மக்கள் அனேவருமே உன்னேக் கொடியவன் என்று தூற்றுவார்கள், மறவாதே.

528. ஏ மனமே! நீ எப்படி

இருக்கவேண்டுமென்பதை நீதிசாஸ்திரத்தின் மூலம் தெரிந்து கொள் மறவாதே.

529. ஏ மனமே! கடவுள் உனக்காகவே மனித உருவம் தாங்கி உலகில் நடமாடிக் கொண்டிருக்கிறார், மறவாதே.

530. ஏ மனமே! பிறரை மதிக்கத் தெரியாதவன் முட்டாள் என்கிற பட்டத்தை உறுதியாகப் பெறுவன், மறவாதே.

531. ஏ மனமே! தியாகத்தை முழுமனத்துடன் செய்துவிடு. உலகெங்கிலும் இருந்து வரும் கடவுள்களும் உன்னைப் போற்றிப் புகழ்வார்கள், மறவாதே.

532. ஏ மனமே! அறியாமை இருக்கும் வரை நாட்டில் முன்னேற்றம் இராது, மறவாதே.

533. ஏ மனமே! சுறுசுறுப்பும் ஊக்கமும் நிறைந்த உனக்கு தன்னடக்கம் உறுதியாக வேண்டுமென்பதை மறவாதே.

534. ஏ மனமே! அறிவில்லாத சோம்பேறிக்குச் செய்யும் உபதேசம் சாம்பலில் செய்த ஹோமத்தைப் போன்றதாகிவிடும்.

535. ஏ மனமே! ஈயாத லோபிக்கு ஸ்வர்க்கவாசம் கிட்டினாலும் அவன் அங்கும் சுகப்படமாட்டான், மறவாதே.

536. ஏ மனமே! ஒழுக்கமற்றவனுக்கு எமன் அவனேதான் ஜாக்ரதை, மறவாதே.

537. ஏ மனமே! பேராசையுடைய பாவி ஒருவனே மக்களுக்குத் துரோகம் செய்கிறவனாவன், மறவாதே.

538. ஏ மனமே! உனது நல்ல பெயரைக் கெடுத்துக் கொள்ள பேராசை ஒன்றே போதும் ஜாக்ரதை, மறவாதே.

539. ஏ மனமே! துரோகியின் சிரிப்பில் எமன் இருந்து வருகிறுன், ஜாக்ரதை.

540. ஏ மனமே! கடவுள் எல்லாவற்றினிடமும் இருப்பினும் மனிதனிடமே இறைவனின் திருவருளைக் கண்டுகொள்ள முடிவதால் நீ கடவுளோடு பேசுவதாகவே நம்பி நீ மனிதனிடமும் பயபக்தியுடன் பேசிவா, மறவாதே.

541. ஏ மனமே! உனது வேஷத்தை நீ என்ருவது ஒரு நாள் கலைத்தாகவேண்டும் ஜாக்ரதை, மறவாதே.

542. ஏ மனமே! காசுக்காக இழிந்த செயலில் நீ ஈடுபட்டுவிடாதே, ஜாக்ரதை.

543. ஏ மனமே! அக்ஞானமுள்ளவரை நீயும் ஒரு அடிமைதான் என்பதை நீ மறவாதே.

544. ஏ மனமே! உன்னிடம் உயர்ந்த லட்சியம் இல்லையென்ருல் நீ ஒரு மனிதனுக இருந்து வர முடியாது, மறவாதே.

545. ஏ மனமே! மிகக் கொடியவனுக்குச் செய்யும் உபதேசமானது கொடிய விஷமுள்ள நல்ல பாம்பிற்குக் கொடுக்கும் நல்ல பசும்பாலைப் போன்றதாகிவிடும், ஜாக்ரதை.

546. ஏ மனமே! ஆசையானது காட்டுத்தீயைப் போன்றதாகும். அதனிடமிருந்து நீ தப்பி விடமுடியாது.

547. ஏ மனமே! கடவுளை உறுதியாக நம்பிவிட்டவனை எவராலும் கெடுக்க முடியாது, மறவாதே.

548. ஏ மனமே! அனுபவம் இல்லாதவனுடைய உபதேசம், குருடன் கையில் இருக்கும் விளக்கு போன்றதாகும்.

549. ஏ மனமே! உனது பேச்சு கேட்பவர்களுக்குப் புரிந்து விடாதபடி இருக்கட்டும், மறவாதே.

550. ஏ மனமே! உனது ஆன்மாவே கடவுளாகும். கடவுளே உனதான்மாவாகும் நம்பு, மறவாதே.

551. ஏ மனமே! நீ நினைக்கிறபடி பிறர் இருக்கவே முடியாது. மறவாதே.

552. ஏ மனமே! வீட்டிற்கும் நாட்டிற்கும் நன்ருக உபயோகப்படாத மனிதன் பதருவன், மறவாதே.

553. ஏ மனமே! உலோபிப்பயல் என்கிற பெயர் உனக்கு இம்மையில் வராது பார்த்துக்கொள்.

554. ஏ மனமே! உனது வியாதிக்கு மருந்துண்டு உன்னிடமுள்ள முரட்டுத்தனமான முட்டாள் தனத்திற்கு மருந்தில்லை, மறவாதே.

555. ஏ மனமே! உனக்கு நல்ல அறிவுடன் ஆற்றலும் உறுதியாக இருந்து வரவேண்டும் அறிவு ஒன்று மட்டும் இருந்தால் வாழ்வு பயனுடையதாகாது, மறவாதே.

556. ஏ மனமே! மன்னித்து விடுவதே உனக்குச் க்ஷேமத்தை உண்டாக்கும், மறவாதே.

557. ஏ மனமே! உன்னை உடனுக்குடன்

கண்காணித்து வர உனது அந்தராத்மாவாகவே கடவுள் உனக்குள் இருந்து வருவதை மறந்துவிடாதே.

558. ஏ மனமே! தன்னையும் மறந்து வம்பளப்பது என்பதே உலகில் எல்லோருக்குமே ஸஹஜமாகும்.

559. ஏ மனமே! நீ பிறருக்கு எதை உபதேசம் செய்ய நினைக்கிறாயோ, முதலில் அந்த உபதேசப்படி நீ நடந்து காட்டுவாயாகுக, மறவாதே.

560. ஏ மனமே! நீ ஒரு மாயை உன்னைத் திருப்தி செய்விக்க கடவுளாலும் முடியாதென்பதை நன்கறிந்து கொண்டுவிட்டேன் ஜாகரதை, மறவாதே.

561. ஏ மனமே! பரிசுத்தமுள்ள மஹான்கள் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றவர்களாவார்கள் நீ அழுதால் அவர்களும் அழுவார்கள் மறவாதே.

562. ஏ மனமே! பிறருடைய குறைகளைச் சொல்லிப் பழிப்பவன் மூடனவன். அந்த முட்டாளுடன் நீ உறவு வைத்துக் கொண்டு விடாதே, ஜாக்ரதை.

563. ஏ மனமே! நீ ஒரு அறிவுகெட்ட மூடனாயிருக்கும்வரை உனக்குள் இருக்கும் உண்மையை அறியமாட்டாய், மறவாதே.

564. ஏ மனமே! ஆடம்பரம் இருப்பவனிடம் உண்மை மறந்து போய்விடும், மறவாதே.

565. ஏ மனமே! அக்கரை சென்ற பின்னும் அதற்கு உதவியாக இருந்த தெப்பக்கட்டையை உனது தலையில் சுமந்து செல்லாதே, ஜாக்ரதை.

547. ஏ மனமே! கடவுளை உறுதியாக நம்பிவிட்டவனை எவராலும் கெடுக்க முடியாது, மறவாதே.

548. ஏ மனமே! அனுபவம் இல்லாதவனுடைய உபதேசம், குருடன் கையில் இருக்கும் விளக்கு போன்றதாகும்.

549. ஏ மனமே! உனது பேச்சு கேட்பவர்களுக்குப் புரிந்து விடாதபடி இருக்கட்டும், மறவாதே.

550. ஏ மனமே! உனது ஆன்மாவே கடவுளாகும். கடவுளே உனதான்மாவாகும் நம்பு, மறவாதே.

551. ஏ மனமே! நீ நினைக்கிறபடி பிறர் இருக்கவே முடியாது. மறவாதே.

552. ஏ மனமே! வீட்டிற்கும் நாட்டிற்கும் நன்றாக உபயோகப்படாத மனிதன் பதறுவன், மறவாதே.

553. ஏ மனமே! உலோபிப்பயல் என்கிற பெயர் உனக்கு இம்மையில் வராது பார்த்துக்கொள்.

554. ஏ மனமே! உனது வியாதிக்கு மருந்துண்டு உன்னிடமுள்ள முரட்டுத்தனமான முட்டாள் தனத்திற்கு மருந்தில்லை, மறவாதே.

555. ஏ மனமே! உனக்கு நல்ல அறிவுடன் ஆற்றலும் உறுதியாக இருந்து வரவேண்டும் அறிவு ஒன்று மட்டும் இருந்தால் வாழ்வு பயனுடையதாகாது, மறவாதே.

556. ஏ மனமே! மன்னித்து விடுவதே உனக்குச் க்ஷேமத்தை உண்டாக்கும், மறவாதே.

557. ஏ மனமே! உன்னை உடனுக்குடன்

கண்காணித்து வர உனது அந்தராத்மாவாகவே கடவுள் உனக்குள் இருந்து வருவதை மறந்துவிடாதே.

558. ஏ மனமே! தன்னையும் மறந்து வம்பளப்பது என்பதே உலகில் எல்லோருக்குமே ஸஹஜமாகும்.

559. ஏ மனமே! நீ பிறருக்கு எதை உபதேசம் செய்ய நினைக்கிறாயோ, முதலில் அந்த உபதேசப்படி நீ நடந்து காட்டுவாயாகுக, மறவாதே.

560. ஏ மனமே! நீ ஒரு மாயை உன்னைத் திருப்தி செய்விக்க கடவுளாலும் முடியாதென்பதை நன்கறிந்து கொண்டுவிட்டேன் ஜாகரதை, மறவாதே.

561. ஏ மனமே! பரிசுத்தமுள்ள மஹான்கள் முகம் பார்க்கும் கண்ணாடி போன்றவர்களாவார்கள் நீ அழுதால் அவர்களும் அழுவார்கள் மறவாதே.

562. ஏ மனமே! பிறருடைய குறைகளைச் சொல்லிப் பழிப்பவன் மூடனாவன். அந்த முட்டாளுடன் நீ உறவு வைத்துக் கொண்டு விடாதே, ஜாக்ரதை.

563. ஏ மனமே! நீ ஒரு அறிவுகெட்ட மூடனாயிருக்கும்வரை உனக்குள் இருக்கும் உண்மையை அறியமாட்டாய், மறவாதே.

564. ஏ மனமே! ஆடம்பரம் இருப்பவனிடம் உண்மை மறந்து போய்விடும், மறவாதே.

565. ஏ மனமே! அக்கரை சென்ற பின்னும் அதற்கு உதவியாக இருந்த தெப்பக்கட்டையை உனது தலையில் சுமந்து செல்லாதே, ஜாக்ரதை.

566. ஏ மனமே! குரோதத்திற்கு இடம் தருவாயாஞல் அதுவே உன் உயிரை வைத்து நரகவேதனைகளை அனுபவிக்கும்படி செய்து சித்ரவதை செய்துவிடும், மறவாதே.

567. ஏ மனமே! உன்னை நீ திருத்திக்கொள்ளவாயாஞல் நரகதேவதைகளிடம் இருந்து நீ தப்பிவிடலாம் ஜாக்ரதை மறவாதே.

568. ஏ மனமே! செய்யக் கூடாத கார்யத்தைச் செய்வதற்கு வெட்கப்படு செய்த பிறகு அதை நினைத்து வெட்கப்படத் தேவையில்லை ஜாக்ரதை மறவாதே.

569. ஏ மனமே! முற்றிலும் நல்லவஞே, கெட்டவஞே உலகில் இல்லை, மறவாதே.

570. ஏ மனமே! எத்தகைய இடையூறுவரினும் எடுத்த காரியத்தை விட்டுவிடாதே, ஜாக்ரதை.

571. ஏ மனமே! படித்தவர்கள் எல்லோருமே புத்திசாலிகள் என்று நம்பிவிடாதே, படித்த முட்டாளும் நிரம்ப இருக்கிருர்கள், மறவாதே.

572. ஏ மனமே! எமன் உன்னை விடமாட்டான், உடனடியாகக் கடவுளை நம்பிவிடு. பிழைத்துவிடுவாய் ஜாக்ரதை, மறவாதே.

573. ஏ மனமே! தன்னை "நான் யார்" எனக் கேட்டு உணர்ந்தவனிடம் இன்பமும் இருது துன்பமும் இருது, மறவாதே.

574. ஏ மனமே! உலகிலேயே மிகக் கொடிய தீமை ஆசையாகும், மறவாதே.

575. ஏ மனமே! பணத்தை பூதம் காப்பது போல் காப்பவனும், படித்தபடிப்பை பயன்படுத் தாதவனும் முட்டாள்களின் முதல்வர்கள் ஆவார்கள், மறவாதே.

576. ஏ மனமே! தான் தானுகவே இருந்துவிடுவதே ப்ரம்ம ஞானமாகும், மறவாதே.

577. ஏ மனமே! தெரியாத விஷயங்களில் நீ தலையிடாதிருப்பதே நல்லது, மறவாதே.

578. ஏ மனமே! அறம் செய்வதற்கு பயந்து ஓடுவது மிகக்கொடிய துரோகமாகும், மறவாதே.

579. ஏ மனமே! முட்டாளுடைய கூட்டுறவினுல் உனக்கு துன்பமே பெருகும், மறவாதே.

580. ஏ மனமே! காக்கைக்கு வெட்கமென்பதே கிடையாது நீயும் காக்கையைப்போல் இருந்துவராதே, ஜாக்ரதை.

581. ஏ மனமே! ஆசையுடன் நீ விரும்புகிற அனைத்துமே உனக்குள்துக்கத்தை நிரந்தரமாக உண்டுபண்ணிக்கொண்டிருக்கும், மறவாதே.

582. ஏ மனமே! உலகிலேயே மிகப்பெரிய ஆயுதம் மன்னித்தலாகும், மறவாதே.

583. ஏ மனமே! பிறரை முட்டாளாக்குகிறவனும் நல்ல முழு முட்டாள் ஆவன் என்பதை நீ மறவாதே.

584. ஏ மனமே! ஒரு நொடிப்பொழுதில் உனது உயிர் உடலைவிட்டுப் பிரிந்து விடும். அதற்குள் கடவுளைச் சரணடைந்துவிடு நற்கதி கிட்டிவிடும். மறவாதே.

585. ஏ மனமே! உனக்கொரு நல்ல உபதேசம்

என்னவென்ருல் கோபம் வந்தவுடன் மௌனமாகிவிடு, மறவாதே.

586. ஏ மனமே! அதர்மத்தின் பிறப்பிடம் குடியாகும். குடிப்பவன் தன்னையும் தன் குடும்பத்தையுமே தனது நாட்டையுமே கெடுத்து விடுகிருன் மறவாதே.

587. ஏ மனமே! குடித்தவனின் அறிவு அவனையுமறியாது மறைந்துவிடும், மறவாதே.

588. ஏ மனமே! பொய் சொல்வதொன்றே மனிதனைக்கெடுக்கும். நீ பொய் சொல்லாதே. ஜாக்ரதை.

589. ஏ மனமே! பழி வாங்கும் நினைப்புடையவன் கொடிய சுயவனுவன் அவனைக் கடவுளும் மன்னிக்க மாட்டான், மறவாதே.

590. ஏ மனமே! ஓனுன்போல் மாறிவிடாதே, ஜாக்ரதை.

591. ஏ மனமே! கெட்ட நடவடிக்கையுள்ளவனுடைய மனோதைரியம் முடிவில் அவனையே முட்டாள் ஆக்கி அழித்துவிடும், ஜாக்ரதை.

592. ஏ மனமே! ஆணவம் இருப்பவனுக்கு எவருமே உதவிசெய்யமாட்டார்கள், மறவாதே.

593. ஏ மனமே! உனக்குள் பொருமை நிறைந்திருப்பதினுல் நீ தினந்தோறுமே துக்கத்தை அனுபவிக்கிருய், மறவாதே.

594. ஏ மனமே! பொருமையுள்ளவன் பார்த்தால்

புனிதமானவையெல்லாமே கெட்டுவிடும், மறவாதே.

595. ஏ மனமே! கோபத்திற்குள் கொடிய விஷம் இருந்து வருவதை நீ மறவாதே.

596. ஏ மனமே! உலகில் உள்ள பாவத்தையும் மது பானத்தையும் ஒரு தராசில் வைத்தால் மதுவின் பாவமே அதிகரித்திருக்கும் ஜாக்ரதை, மறவாதே.

597. ஏ மனமே! மது குடிப்பவனை அந்த மதுவே அவன் உயிரைக் குடித்துவிடும், ஜாக்ரதை, மறவாதே.

598. ஏ மனமே! நீ தப்பி விடுவதற்காகச் சொல்லும் பொய்யே உன்னைப் பிடித்துத் தந்துவிடும் ஜாக்ரதை, மறவாதே.

599. ஏ மனமே! பிறரைக் கொடுமைப் படுத்தி விடுவையானால் உனது பெயரையும் மஹாபாவிகளின் பெயரோடு எழுதிவைத்து விடுவார்கள் ஜாக்ரதை, மறவாதே.

600. ஏ மனமே! பாம்பிற்குக் கொடுத்த பால் விஷமாகி வெளிவருவதைப் போல் நீசர்களான தீய குணமுடைய கொடியவர்களுக்குக் கொடுக்கும் அனைத்துமே விஷமாகமாறி வெளிவரும், மறவாதே.

601. ஏ மனமே! உனது கெட்ட எண்ணம் முதலில் உன்னையே கெடுத்துவிடும், ஜாக்ரதை.

602. ஏ மனமே! உனக்குள் இருக்கும் இருமாப்பே உனது முதல் எதிரியாகும் ஜாக்ரதை, மறவாதே.

603. ஏ மனமே! நற்குணமுள்ளவனைக் கண்டு துர்க்குணமுள்ளவன் சதாகாலமும் பொறாமைப் படுவன்.

604. ஏ மனமே! பொறாமையுள்ளவனும் கொடிய நல்ல விஷமுள்ள நல்ல பாம்பும் ஒன்றுதான், ஜாக்ரதை.

605. ஏ மனமே! அளவிடமுடியாத பாக்கியத்தை எவன் செய்துள்ளானோ அவன் ஒருவனுக்கே கோபம் வராது, மறவாதே.

606. ஏ மனமே! மனித சமூகமே வெறுக்கத்தக்கவன் குடிகாரன் என்பதை நீ மறவாதே.

607. ஏ மனமே! சூதாடுகிறவனை ஒருநாளும் நீ நம்பிவிடாதே, ஜாக்ரதை.

608. ஏ மனமே! ஒரு பொய் சொல்வாயானால் அது பின்பு விஷம் போன்று உடம்பில் பரவிவிடும் பின்பு பொய் சொன்னவனைத் திருத்தவே முடியாது, மறவாதே.

609. ஏ மனமே! உனக்குள் பலவீனமுள்ளவரை நீயும் கஷ்டப்பட்டாகவேண்டும், மறவாதே.

610. ஏ மனமே! தீயவனைக் கொளுத்திய பிறகு கிடைக்கும் அவன் சாம்பலும் தீயதைச்செய்யும் ஜாக்ரதை, மறவாதே.

611. ஏ மனமே! நீ செய்து வரும் கொடிய தீமைகள் உனது வம்சத்தையே வேரறுக்கும், மறவாதே.

612. ஏ மனமே! அகம்பாவம் இருக்கும்வரை உனக்கு நற்கதி கிட்டாது.

613. ஏ மனமே! நீசபுத்தியிருப்பவனிடம்

பொறுமை ஒன்றே நிறைந்திருக்கும், மறவாதே.

614. ஏ மனமே! பொறுமையும், பேராசையும் இருப்பவன் உடலில் விஷம் நிரம்பியிருப்பதால் நீ ஜாக்ரதையாக அவனிடம் பழகு, மறவாதே.

615. ஏ மனமே! கோபமுள்ளவன் கொடிய பாவத்தையும் துணிந்து செய்வன், மறவாதே.

616. ஏ மனமே! குடிகாரனுக்கு இம்மையில் இவ்வுலகம் நரகமாகும், மறவாதே.

617. ஏ மனமே! சூதாட்டம் நல்ல மனிதனையும் ஆசை காட்டி அடியோடு மோசம் செய்து விடும், ஜாக்ரதை, மறவாதே.

618. ஏ மனமே! வஞ்சகன் கொடிய விஷத்தை தனக்குள் வைத்துக் கொண்டிருக்கும் நல்ல பாம்பைப் போன்றவனுவன், மறவாதே.

619. ஏ மனமே! பலவீனமுள்ள மனிதனின் ஸங்கல்பம் எதுவுமே நிறைவேறுது, மறவாதே.

620. ஏ மனமே! உலகில் நடைபெறும் நன்மை தீமை அனைத்திற்கும் வித்து ஸங்கல்பமாகும், மறவாதே.

621. ஏ மனமே! ஆயிரம் நாய்கள் குலைத்தாலும் யானை திரும்பிப் பாராதது போல் நீயும் திரும்பிப் பாராது உனது பணியில் முழுமனத்தையும் செலுத்தி விடு, மறவாதே.

622. ஏ மனமே! நீ உறங்குவதற்கு உனக்குள்ளிருக்கும் தீய எண்ணம் ஒன்று

போதும்.

623. ஏ மனமே! உனக்குள்ளிருக்கும் கர்வமே உன்னைப் பைத்தியமாக்கிவிடும்.

624. ஏ மனமே! பெருமை இருப்பவனைக் கண்டவுடன் இவன் ஒரு அறிவுள்ள முட்டாள் என்கிற ஞாபகம் இருக்கட்டும், மறவாதே.

625. ஏ மனமே! உன்னையே நீ அறிவாளி என்று கூறுவாயானால் நீயும் முட்டாளாகி விடுவாய் மறவாதே.

626. ஏ மனமே! ஆண்மையுள்ளவனுக்குக் கோபம் வராது, மறவாதே.

627. ஏ மனமே! குடி மனிதனின் நல்லறிவைக் கெடுத்து உயிரை வைத்து சித்ரவதை செய்வதுடன் தாய்க்கும் மனைவிக்கும் வித்யாஸம் தெரியாதபடி செய்து விடுவதோடு மேலும் மாபாதகங்களையும் துணிந்து செய்யத் தூண்டி விடும், என்பதை மறவாதே.

628. ஏ மனமே! பேராசையுள்ளவனே சூதாடுகிறான், மறவாதே.

629. ஏ மனமே! உலகில் மிகக்கொடிய தீயவர்களே மிக மிக நல்லவர்களைப்போல் நடிப்பதைக் கண்டு நீ ஏமாந்து விடாதே, ஜாக்ரதை.

630. ஏ மனமே! எங்கு சென்றாலும் நீ செய்துள்ள தீவினைகள் உன்னை விடாதென்பதை மறவாதே.

631. ஏ மனமே! பிறருக்கு நன்மை செய்யாவிடினும் தீமைசெய்துவிடாதே

ஜாக்ரதை.

632. ஏ மனமே! ஆணவம் இருப்பின் அது உன்னை ஒன்றுக்கும் உதவாமல் செய்து விடுவதுடன் வாழ்க்கையைப் பயனற்ற தாக்கி விடும் ஜாக்ரதை, மறவாதே.

633. ஏ மனமே! பணக்காரனைக் கண்டாலும் நீசன் ஒருவனே பொறாமைப்படுவன் மறவாதே.

634. ஏ மனமே! பொறாமை ஒரு கொடிய காட்டுத் தீயாகும் ஜாக்ரதை மறவாதே.

635. ஏ மனமே! வீரமுள்ளவனிடமே பொறுமையும் இருக்கும், மறவாதே.

636. ஏ மனமே! குடித்தவுடன் நல்லறிவு கெட்டுவிடுவதோடு குடித்தவனை அந்த மது சர்வநாசம் செய்துவிடுகிறதை, மறவாதே.

637. ஏ மனமே! பகடை உருட்டினுல் பஞ்ச பாண்டவருடைய கதியே உனக்கும் வரும், மறவாதே.

638. ஏ மனமே! கபடமாகப் பேசுகிறவனை நம்பிவிடாதே, ஜாக்ரதை.

639. ஏ மனமே! பலவீனமுள்ளவர்களால் நாட்டிற்கே பெருத்த நஷ்டமுண்டாகும், மறவாதே.

640. ஏமனமே! மிகக்கொடிய தீய உணர்ச்சிகளுக்கு நீ அடிமையாகிவிடாதே.

641. ஏ மனமே! பிறரை நீ வெறுப்பாயானுல் கடவுள் உன்னை அறவே வெறுத்து விடுவன், மறவாதே.

642. ஏ மனமே! மிகக்கொடிய கெட்ட குணமுள்ளவனே தடித்தனத்துடன் அகம்பாவத்தோடு பேசுவன், மறவாதே.

643. ஏ மனமே! பொறுமையிருப்பவனைக் கண்டவுடன் அவனிடம் மூதேவி குடியேறி விடுவாள் என்பதை நீ மறவாதே.

644. ஏ மனமே! பொறுமையுள்ளவனின் உடல் பூராவும் எரிமலைபோல் கோபம் சீறிக் கொண்டிருக்கும், மறவாதே.

645. ஏ மனமே! கொடியமுன் கோபமுள்ளவனும் வெறிபிடித்த நாயும்சும்மாயிராது, மறவாதே.

646. ஏ மனமே! குடிப்பழக்கம் ஒன்றே உலகில் உள்ள சகல தீமைகளுக்கும் முதல் காரணமாகும், மறவாதே.

647. ஏ மனமே! நீ சூதாடினால் பிச்சை எடுப்பாய் ஜாக்ரதை, மறவாதே.

648. ஏமனமே!உலகிலேயே மிகக்கொடுமையான மஹாபாவம் நிறைந்த அநியாயச் செய்ல லஞ்சம் வாங்குவதாகும். லஞ்சம் வாங்குகிறவனை கடவுள் மன்னிக்கமாட்டார்,மறவாதே.

649. ஏ மனமே! இச்சையானது எதுவாக இருப்பினும் அது உன்னைக் கொல்லும் கொடிய விஷமேயாகும், மறவாதே.

650. ஏ மனமே! ஒரு சிறு ஓட்டை இருப்பின் அது கப்பலை மூழ்கடித்துவிடும், அதைப்போல ஒரு தீய செயல் உன்னை அடியோடு கெடுத்துவிடும், மறவாதே.

651. ஏ மனமே! பிறரை வெறுப்பதினால் உனக்கு என்ன லாபமுண்டு சொல், ஜாக்ரதை.

652. ஏ மனமே! கர்வமுள்ளவன் தவறு செய்யாமல் இருக்கவே முடியாது.

653. ஏ மனமே! இரக்கமற்ற கொடிய பாவியினிடம் பொறாமை நிறைந்திருக்கும் மறவாதே.

654. ஏ மனமே! பொறாமை இருக்குமானால் அதுதான் நீ முன்பு செய்த பாவத்திற்குண்டான மோசமான தண்டனை, மறவாதே.

655. ஏ மனமே! எவனிடம் கோபமுள்ளதோ அந்தக் கோபம் அவனையே முதலில் கொன்றுவிடும், ஜாக்ரதை, மறவாதே.

656. ஏ மனமே! நல்லறிவு மிக்க மனிதனை விலங்காக்கி விடவல்லது மதுபானம், மறவாதே.

657. ஏ மனமே! திரைமறைவில் குற்றம் செய்தவன் மனித சமூகத்தைக் கண்டு பயப்படுவன், மறவாதே.

658. ஏ மனமே! தனது சுயநலம் வெற்றி பெற லஞ்சம் கொடுப்பவனே முதல்தரமான பாவி லஞ்சம் வாங்குகிறவன் மன்னிக்க முடியாத மிகக்கொடிய மஹாபாவியென்பதை நீ மறந்துவிடாதே.

659. ஏ மனமே! தீயவர்கள் நல்ல பாம்பைப் போன்றவர்கள், ஜாக்ரதை.

660. ஏ மனமே! ஒருதரம் ஒழுக்கம் கெடுமானால் அதனால்வரும் கெட்ட பெயரை மாற்றிவிட

முடியாது, மறவாதே.

661. ஏ மனமே! செருக்குள்ளவன், முடிவில் கெட்டொழிந்து போவன், மறவாதே.

662. ஏ மனமே! உனக்குள் இருக்கும் செருக்கு உனது பார்வையின் மூலம் வெளிவருகிறது ஜாக்ரதை, மறவாதே.

663. ஏமனமே! பொறுமையற்ற மனிதனைத் தேடிக் கொண்டு ஸகல பாக்கியமும் தானே வந்துசேரும் மறவாதே.

664. ஏமனமே! வெளியில் பகைவனைத் தேடாதே. உனக்குப் பகைவன் நீ தான் ஜாக்ரதை, மறவாதே.

665. ஏ மனமே! நீ நஷ்டப்படுவதற்குக் காரணம் உன்னிடமுள்ள கொடிய முன்கோபமேயாகும், மறவாதே.

666. ஏ மனமே! குடியினால் மனிதனின் மூளை முற்றிலும் மழுங்கிக் கெட்டுப் போய்விடும், மறவாதே.

667. ஏ மனமே! பக்காத் திருடனை பலம் மிக்க கொள்ளைக்காரன் மோசம் செய்து கொள்ளையடித்துவிடுவன் மறவாதே.

668. ஏ மனமே! பழிவாங்கும் எண்ணமுடையவனே மிகக்கொடிய விஷம் நிறைந்த பாவியாவான், மறவாதே.

669. ஏ மனமே! மிகக் கொடிய தீயகுணமுடையவர்கள் கெட்ட ரத்தத்தை ருசித்துக் குடிக்கும் ஆட்டைப் போன்றவர்கள், ஜாக்ரதை.

670. ஏ மனமே! உனக்குத்தெரியாமல் எந்த கெட்ட காரியத்தையும் நீ செய்துவிடமுடியாது, மறவாதே.

671. ஏ மனமே! அடக்கமற்ற மடையனிடம் செல்வமோ மற்றவைகளோ நிலைபெறாது, மறவாதே.

672. ஏ மனமே! மனிதகுலத்தின் முதல் தரமான சத்ரு செருக்காகும், மறவாதே.

673. ஏ மனமே! பெருமையினால் அழிந்தவர்களைக் கணக்கிட முடியாது ஜாக்ரதை, மறவாதே.

674. ஏ மனமே! உனது கூடவே இருந்து வரும் பகைவன் ஆசையாகும், ஜாக்ரதை, மறவாதே.

675. ஏ மனமே! குடிகாரனிடம் நல்ல அறிவு இராது, உன்னிடமோ நல்லறிவு இருக்கிறது, ஜாக்ரதை, மறவாதே.

676. ஏ மனமே! அறிவுகெட்ட முழுமுட்டாள்கள் கள்ளைக் குடித்துவிட்டு தன்னைத்தானே பைத்தியமாக்கிக்கொண்டு விடுகிறார்கள், மறவாதே.

677. ஏ மனமே! மிருகங்களுக்கும் பொய் சொல்லத் தெரியாது. நல்ல பகுத்தறிவுடைய நீ மறந்துவிடாதே, ஜாக்ரதை.

678. ஏ மனமே! உன்னை எல்லோருமே இவன் ஒரு கர்ம சண்டாளன் என்று சொல்லும்படி நடந்து கொண்டுவிடாதே, ஜாக்ரதை.

679. ஏ மனமே! அகங்காரம் முற்றிலும் சாம்பலாகிவிடுமானால் அவன் பிரம்ம

மயமாகி விடுவன், மறவாதே.

680. ஏ மனமே! அகந்தை உள்ளவன் எவரிடமும் துணிந்து பேசி கெட்ட பெயரெடுப்பன், ஜாக்ரதை, மறவாதே.

681. ஏ மனமே! பொருமையுள்ளவனின் நினைப்பிலும் பார்வையிலும் பேச்சிலும் விஷம் கக்கும் மறவாதே.

682. ஏ மனமே! உன்னிலும் பலமுள்ளவர்களிடமிருந்து நீ முன் ஜாக்ரதையாக விலகிக் கொண்டு விடு, மறவாதே.

683. ஏ மனமே! மதுபானம் உனது மானத்தைப் போக்கி வெட்கமற்றவனாகி மக்கள் சிரிக்கும்படி செய்துவிடும், ஜாக்ரதை.

684. ஏ மனமே! குடிகாரனின் மூளை இருட்டாகவே இருக்கும், மறவாதே.

685. ஏ மனமே! பொய் சொல்லும் திறமை உள்ளவன் சகலபாவத்தையும் துணிந்து செய்துவிட்டு பொய் சொல்லி மறைத்து விடுவன். மனமே பொய் சொல்லிப் பிழைப்பதைக் காட்டிலும் பிச்சை எடுத்துப் பிழைக்கலாம், மறவாதே.

686. ஏ மனமே! உனது பிறப்பிற்கும் இறப்பிற்கும் அகங்காரமே காரணமாகும், மறவாதே.

687. ஏ மனமே! நல்ல பாம்பு தனக்குள் விஷத்தை வைத்திருப்பதைப் போல பொறாமையுள்ளவனின் உடல் பூராவுமே விஷம் நிறைந்திருக்கும், மறவாதே.

688. ஏ மனமே! உலகிலேயே குடிவெறியை விட மிகக் கொடிய பாவம் இல்லவே இல்லை என்பதை நீ மறவாதே.

689. ஏ மனமே! உனக்கு மண்டைக்கனம் வரும்போது தலை கால் தெரியாமல் உன்னை நீயே கெட்டிக்காரன் என்று சொல்லிக் கொள்வாய் ஜாக்ரதை, மறவாதே.

690. ஏ மனமே! கடவுளுக்காகவே கடமையைச் செய்வதாகக் கூறுவதானது தன்னைத்தானே ஏமாற்றிக் கொண்டு, அதாவது நான் ஒரு பொய் சொல்லும் பித்தலாட்டக்காரன் என்பதை வெளிப்படுத்துவதாகும், மறவாதே.

691. ஏ மனமே! நல்லதை நினைக்கவே நீ பிறந்துள்ளாய் கேட்டை நினைப்பாயானால் கடவுள் உன்னை மன்னிக்க மாட்டார், மறவாதே.

692. ஏ மனமே! உனது கடமை பிறரைப் பழிவாங்குவதல்ல அனைவரிடமும் நீ அன்பையும் பண்பையும் செலுத்திவா, மறவாதே.

693. ஏ மனமே! புனிதச் செயல்களில் எல்லாம் தலைசிறந்த புனிதச் செயல் அனைத்தையும் தியாகம் செய்து விடுவதேயாகும், மறவாதே.

694. ஏ மனமே! அன்பும், பண்பும், அடக்கமும், நேர்மையும் உள்ள யோக்யனை ஸ்ரீ தேவி ஒரு பொழுதும் கைவிடமாட்டாள் மறவாதே.

695. ஏ மனமே! உனக்காக மற்றவர்கள் உனது கடமையைச் செய்வதினால் நீ உனது

கடமையைச் செய்துவிட்டதாக நினைப்பின் அது உன்னை நீயே ஏமாற்றிக்கொள்வதாகும், மறவாதே.

696. ஏ மனமே! தான் செய்துவிட வேண்டிய வேலையை பிறரைக் கொண்டு செய்யச் சொல்வதினால் பெருத்த நஷ்டத்துடன் கஷ்டமும், அவமானமும் உண்டாகிவிடலாம், ஜாக்ரதை, மறவாதே.

697. ஏ மனமே! கடமையை முற்றிலும் மறந்தவனே மனிதவுருவத்தில் இருந்துவரும் பேய் பிசாசுகளாவார்கள், மறவாதே.

698. ஏ மனமே! பேராசையுள்ள அக்ஞானிகளிடம் நீ உயர்ந்த முறையில் பழகி வருவதற்கு அவர்களைப் புகழ்தலும் பாராட்டுதலும் மிகவும் அவசியம் தேவையாகும் என்பதை மறவாதே.

699. ஏ மனமே! ஆசைகளை உடனுக்குடன் உதறித்தள்ளி விடுகிற வீர புருஷனே அழிவற்ற ஆன்மாவை தனக்குள் 'நான்' என்று உணர முடியும், மறவாதே.

700. ஏ மனமே! சட்டங்களுக்குப் பயந்து நடப்பதும் உனது கடமையில் ஒன்றாகும் ஜாக்ரதை, மறவாதே.

701. ஏ மனமே! உனது பிறப்புரிமை, கடமையை மறக்காமல், உண்மையாகச் செய்வதொன்றேயாகும், மறவாதே.

702. ஏ மனமே! கடமையைச் செய்ய வெட்கப்படுகிறவன் மறுபிறவியில் கழுதையாகப் பிறந்து பொதி சுமந்து மடிவன்

மறவாதே.

703. ஏ மனமே! அனைவரையுமே இகழ்ந்து பேசுகிறவனை நம்பாதே அவனுடன் பழகாதே, ஜாக்ரதை.

704. ஏ மனமே! புகழ்ந்து பேசுகிறவனை நம்புவாயானால் உனதறிவு கெடுவதுடன் நீயும் கெட்டுப் போய்விடுவாய், ஜாக்ரதை.

705. ஏ மனமே! பிறர்க்கு நீ சொப்பனத்திலும் துரோகம் செய்யாதிருப்பதுவே நீ செய்து வருகிற மிகப்புனிதமான தவமாகுமென்பதை மறவாதே.

706. ஏ மனமே! பேராசையுடன் இது எனது கடமை என்று நீ அநியாயத்தைச் செய்துவிடாதே, ஜாக்ரதை, மறவாதே.

707. ஏ மனமே! தற்புகழ்ச்சி ஒன்றே உடனடியாக உனக்குக் கெட்ட பெயரை உண்டாக்கித் தந்துவிடும், மறவாதே.

708. ஏ மனமே! புனிதமயமான நற்பணிகளைச் செய்து வருகிற தொண்டனைப் பெரும் புகழாவது தானே தேடிவரும், மறவாதே.

709. ஏ மனமே! யோக்யதை அற்றவனை புகழ்வதால் புகழ்கிற உனக்கும் அவனுக்கும் கெடுதலாகும், மறவாதே.

710. ஏ மனமே! கடமையைச் செய்வதில் தமது முழு மனத்தையும் ஈடுபடுத்தி விட்டவன் எவனோ அவன் பிறர் தன்னைப் போற்றுவதையும் தூற்றுவதையுமே கவனிக்கவே மாட்டான், மறவாதே.

711. ஏ மனமே! மனம் சொன்னபடி செய்வதெல்லாம் கடமையாகி விடாது, ஜாக்ரதை.

712. ஏ மனமே! மக்கள், எவனை அயோக்கியன் என்று சொல்லிவிட்டார்களோ அவன் அந்தப் பெயரைப் போக்கிக் கொள்ளவே முடியாது, ஜாக்ரதை, மறவாதே.

713. ஏ மனமே! புகழுக்காகச் செய்கிறவேலைகள் அனைத்துமே தனது கூடவே துக்கத்தையும் கூட்டிக்கொண்டு வருமென்பதை மறவாதே.

714. ஏ மனமே! நீ புகழவும் வேண்டாம், இகழவும் வேண்டாம், மறவாதே.

715. ஏ மனமே! உனக்கு உண்மையாக மனச்சாந்தி வேண்டுமென்றால் கடமையை உறுதியாகச் செய்துவா, மறவாதே.

716. ஏ மனமே! கடமையைச் செய்ய மறந்தவன் பிறவியின் பிடியில் இருந்து மீள முடியாது, ஜாக்ரதை, மறவாதே.

717. ஏ மனமே! திடீரென்று எரிகிற விளக்கு அணைந்து விடுவதைப்போல் அளவுக்கு மிஞ்சிய புகழும் திடீரென்று மறைந்துவிடும், ஜாக்ரதை, மறவாதே.

718. ஏ மனமே! முட்டாள் பணக்காரனாக இருப்பதால் அந்த மூடனைப் புகழ்ந்து அவருடன் நெருக்கமாகப் பழக்கத்தை உண்டு பண்ணிக் கொண்டு தனது காரியத்தை சாதித்துக் கொண்டுவிடலாகுமென்பதே அறிவுள்ள சுய நலமிகள் செய்துவரும் வேலையாகும், ஜாக்ரதை, மறவாதே.

719. ஏ மனமே! புரியாத விஷயத்தைத் தெரிந்து கொண்டுள்ளதாகப் பேசுகிறவன் மதியற்ற முட்டாள் என்பதை மறவாதே.

720. ஏ மனமே! கடமையைச் செய்வதற்கு முன்பே அதைப்பற்றிக் கவலைப்படுகிறவன் சோம்பேறியாவன் என்பதை மறவாதே.

721. ஏ மனமே! அறம் எதுவோ அது ஒன்றை மட்டும் உறுதியாகச் செய்வதே உனது கடமை, மறவாதே.

722. ஏ மனமே! எதற்கும் தகுதியற்ற மடையனைப் புகழ்கிறவன் ஒரு நல்ல பகுத்தறிவுள்ள முட்டாள் என்பதை நீ மறவாதே.

723. ஏ மனமே! உன்னைப் பழிவாங்க நினைப்பவர்கள் புகழ்ந்து பாராட்டும் புகழுரையில் நீ மயங்கிவிடாதே, ஜாக்ரதை.

724. ஏ மனமே! நற்குணங்களை ஆபரணமாக்கிக் கொண்டுள்ளவனின் புகழ் சொல்லுக்கடங்காததாகும், மறவாதே.

725. ஏ மனமே! கஷ்ட காலம் முற்றிவிட்டபோதிலும் கடமையை மறவாது செய்கிறவனே புண்ய புருஷன், மறவாதே.

726. ஏ மனமே! மக்களின் துக்கத்தைத் துடைத்துக் கொண்டிருப்பது மனிதனுகப் பிறந்துள்ள ஒவ்வொருவருடைய கடமையாகும், மறவாதே.

727. ஏ மனமே! தன்னைத்தானே துறவி என்று சொல்லிக் கொள்கிறவன் ஒன்றையுமே துறவாதவனுவன், மறவாதே.

728. ஏ மனமே! முகஸ்துதி செய்கிறவனை நம்பிவிடாதே. உன்னை மோசம் செய்வதற்கே முகஸ்துதி செய்கிறான், மறவாதே.

729. ஏ மனமே! நீ பெருமைப்பட, பெருமைக்குரிய காரியம் என்ன செய்து விட்டாய் ஜாக்ரதை, மறவாதே.

730. ஏ மனமே! உனது விருப்பம் போல் செய்வதெல்லாம் கடமையாகி விடாது. அது கொடுமையாகமாறி வந்து உன்னைத் துன்புறுத்திவரும், ஜாக்ரதை

731. ஏ மனமே! நீ துறப்பதற்கு உன்னிடம் என்ன உருப்படியாக இருக்கிறது சொல்? மறவாதே.

732. ஏ மனமே! உன்னை நன்கு தெரிந்து கொள்ளாமல் புகழ்கிறவனை முற்றிலும் நீ நம்பிவிடாதே.

733. ஏ மனமே! பொருள் இருப்பவனிடம் கவலையும் பயமும் கூடவே இருந்து வரும், மறவாதே.

734. ஏ மனமே! பிறர் செய்துள்ள தவறுகளை அப்பொழுதே மறந்துவிடுவதும் தான் செய்துள்ளதவறுகளை உடனுக்குடன் திருத்திக் கொள்வதுமே உனது கடமையாகும், மறவாதே.

735. ஏ மனமே! தியாகம செய்வதற்கு உன்னிடம் ஒன்று இருக்குமானால் தியாகத்தின் மஹிமையை நீ நினைத்துக் கொள்ள வேண்டியதுதான் தியாகத்தை செய்த பிறகும் நீ தியாகத்தை நினைத்து வருவாயானால் நீ ஒன்றையுமே தியாகம்

செய்தவனுகமாட்டாய், மறவாதே, ஜாக்ரதை.

736. ஏ மனமே! தகாத காரியங்களை எல்லாம் தந்திரமாகச் செய்தும், மக்களை ஏமாற்றியும் புகழைத் தேடிக் கொள்கிறவன் நயவஞ்சகம் நிறைந்த அயோக்கியனுவன், மறவாதே.

737. ஏ மனமே! வண்டிச்சக்கரம் போன்றது செல்வம். எவனிடமும் நில்லாது சுழன்று கொண்டே இருக்கும், மறவாதே.

738. ஏ மனமே! நீ நாடகத்தில் நடிக்கும் நடிகனுவாய், கடவுள் கொடுத்த வேஷத்தைப் போட்டுக் கொண்டு உண்மையான உறுதியுடன் நடிப்பதே உனது கடமை. அதுவே கடவுளுக்கு நீ செய்துவரும் நன்றிக் கடனுமாகும், மறவாதே.

739. ஏ மனமே! பொருள் இருந்தும் அதைப் பணிக்காக விநியோகிக்கத் தெரியாதவனை மாபாவி என்றும் கூறுவார்கள், மறவாதே.

740. ஏ மனமே! நீதி தவறியவனிடம் பொருளும் நிலைக்காது அருளும் நிலைக்காதென்பதை மறந்துவிடாதே.

741. ஏ மனமே! கஷ்டப்பட்டு ஈட்டிய பொருளை எவன் தானும் அனுபவிக்காமல் பிறருக்கும் கொடாமல் இருந்து வருகிறுனோ அவன் புதையலைக் காக்கும் பூதம் போன்றவனுவன், மறவாதே.

742. ஏ மனமே! ஆசையிருப்பவர்கள் மறைந்த பின் அவர்களுடைய ஸௌகரியத்திற்காகவே நரகம் சிருஷ்டிக்கப்பட்டுள்ளதை மறந்துவிடாதே.

743. ஏ மனமே! ஆசையுள்ளவன் செத்தாலும் அவனிடமுள்ள ஆசையானது மறுபிவியிலும் அவனைப் பற்றிக் கொண்டுவரும், மறவாதே.

744. ஏ மனமே! சுயநலமிருப்பின் அது பேராசையை உண்டாக்கும். பிறகு அது பொறாமையையும் உண்டாக்கும். பின்பு அது கொலை, கொள்ளைகளை செய்யத்தூண்டும் ஜாக்ரதை, மறவாதே.

745. ஏ மனமே! சந்தேகமுள்ளவனே மீண்டும் பிறக்கிறான் இறக்கிறான் என்பதை நீ மறவாதே.

746. ஏ மனமே! முகஸ்துதி செய்பவனை நம்பாதே, அவன் உன்னைப் போற்றிப் புகழ்ந்து ஏமாற்றிவிடுவன், ஜாக்ரதை, மறவாதே.

747. ஏ மனமே! ஒவ்வொரு ஆசையும் உனக்காகவே ஒவ்வொரு கொடிய நரகத்தை சிருஷ்டிக்கும், மறவாதே.

748. ஏ மனமே! மனித சமூகத்தின் அறிவு கெட்டு மனிதன் நாசமடைந்து வருவதற்குக் காரணம் பேராசையாகும், மறவாதே.

749. ஏ மனமே! மனிதன் பிறரை நினைப்பது தனது சுயநலம் பூர்த்தியடைவதற்காகவேதான் ஜாக்ரதை, மறவாதே.

750. ஏ மனமே! சந்தேகமிருப்பவனின் கவலையைக் கடவுளாலும் போக்கமுடியாது, மறவாதே.

751. ஏ மனமே! முகஸ்துதியை விரும்புவாயானால் நீ கஷ்டப்படுவதுடன் பெறுத்த நஷ்டத்திற்கும் உள்ளாவாய், மறவாதே.

752. ஏ மனமே! ஆசையே பேய் பிசாசுகளாகி உன்னை பற்றிக் கொண்டுள்ளது ஜாக்ரதை, மறவாதே.

753. ஏ மனமே! உன் வாழ்வை விரிவு படுத்துவது உன்னிடமுள்ள பேராசையாகும் ஜாக்ரதை, மறவாதே.

754. ஏ மனமே! சுயநலமானது துன்பத்தின் வித்தாகும். ஒரு வித்தானது கோடியாகப் பெருக்கிவிடும் ஜாக்ரதை, மறவாதே.

755. ஏ மனமே! தன்னைத்தானே சந்தேகப் படுகிறவன் நற்கதியடைய மாட்டான், மறவாதே.

756. ஏ மனமே! முகஸ்துதிக்கு ஆசைப்படுகிறவன் அதனாலேயே மனவேதனைப்பட்டுகெடுவன், மறவாதே.

757. ஏ மனமே! உன்னிடமுள்ள ஆசைக்கு, நரை, திரை, மூப்பு, சாக்காடு எதுவுமே இல்லை அனைத்தும் உனது உடலுக்குண்டு ஜாக்ரதை, மறவாதே.

758. ஏ மனமே! இதைச் செய், அதைச்செய், இது வேண்டும், அது வேண்டுமென்று தூண்டுவது உன்னிடமுள்ள ஆசையாகும்.

759. ஏ மனமே! சுயநலமற்ற தேனீக்களைப் போல நீயும் இருந்துவா, மறவாதே.

760. ஏ மனமே! துயரமனைத்திற்கும் வித்து சந்தேகமாகும், மறவாதே.

761. ஏ மனமே! உன்னிடம் பொருள்

இருக்குமானுல் முகஸ்துதி செய்பவர்கள் உன்னைத்தேடி வந்துகொண்டேயிருப்பார்கள் ஜாக்ரதை, மறவாதே.

762. ஏ மனமே! உன்னிடமுள்ள பேராசையை நிறைவேற்ற கடவுளாலும் முடியாது, மறவாதே.

763. ஏ மனமே! உன்னைக் கொடுமையாக தண்டிக்க வேண்டுமென்பதற்காகவே கடவுள் உனக்குள் ஆசையைப் புகுத்திவிட்டார் ஜாக்ரதை, மறவாதே.

764. ஏ மனமே! நீ அமைதியற்றிருப்பதற்குக் காரணம் உனக்குள் இருக்கும் சுயநலமாகும், மறவாதே.

765. ஏ மனமே! நீ முன்னேற்றமடையாததற்குக் காரணம் உனக்குள்ளிருக்கும் சந்தேகமாகும், மறவாதே.

766. ஏ மனமே! முகஸ்துதி மிகக்கொடிய விஷம் நிறைந்த மாயையாகும். அந்த மாயையின் பிடியில் அகப்படாத மனிதனைக் காணமுடியாது ஜாக்ரதை, மறவாதே.

767. ஏ மனமே! உனது நல்லறிவைக் கெடுப்பது பேராசையாகும், ஜாக்ரதை, மறவாதே.

768. ஏ மனமே! ஆசையிருப்பவனே மற்றவர்களை எல்லாம் நினைக்கிருன். பிறரை நினைப்பவனே மறுபிறவியையும் எடுப்பன் ஜாக்ரதை, மறவாதே.

769. ஏ மனமே! உனது புகழைக் கெடுக்கும் சத்ரு சுயநலமாகும், மறவாதே.

770. ஏ மனமே! சந்தேகமுள்ளவனின் மனம் சூறாவளிக்காற்றில் அகப்பட்ட பஞ்சுபோல் இருக்கும் மறவாதே.

771. ஏ மனமே! நீ பிறரை எண்ணி நகையாடுவாயானால் அது திரும்பி வந்து உன்னையும் வஞ்சம் தீர்க்காமல் விடாது, மறவாதே.

772. ஏ மனமே! நீ புகழுக்கு ஆசைப்பட்ட ஒரு முட்டாள் உன்னை புகழ்வதாக நினைத்து நீ சந்தோஷமடைந்துவிடாதே, பிறர் உன்னைப் புகழ்வதெல்லாம் உன்னை ஏளனம் செய்வதாகு, மறவாதே.

773. ஏமனமே! அக்னியின்பசியைக்கடவுளாலும் தீர்த்துவிட முடியாது. அது போல் பேராசையுடையவனையும் திருப்திப் படுத்த கடவுளாலும் முடியாது, மறவாதே.

774. ஏ மனமே! ஆசைக்கு அடிமையானவன் நரகத்தில் இருந்து மீளமுடியாது மறவாதே.

775. ஏ மனமே! சுயநலமுள்ளவனிடம் இரக்கம் என்பதே இராது, மறவாதே.

776. ஏ மனமே! பணிவன்போடு பொறுமையாக இருந்துவா. உனது காலடியில் அனைவரும் இருப்பார்கள், மறவாதே.

777. ஏ மனமே! இறைவனின் படைப்பே அனைத்தும். அதில் எதை நீ இழிவாகப் பேசமுடியும் சொல், ஜாக்ரதை, மறவாதே.

778. ஏ மனமே! பேராசையிருப்பவனின் நெஞ்சம் வறுமையின் இருப்பிடம் மறவாதே.

779. ஏ மனமே! உலகிலேயே என்றென்றும் இளைத்துவிடாது மனிதனின் உயிரை வைத்து சித்ரவதை செய்து கொண்டு இளமையுடன் இருந்து வருவது ஆசை ஒன்றேயாகும், முதுமை அடைந்துள்ள நீ ஜாக்ரதையோடு இருந்து வா, மறவாதே.

780. ஏ மனமே! சந்தேகமற்றவர்களைக் காண்பது உலகில் மிகவும் துர்லபமாகும், மறவாதே.

781. ஏ மனமே! ஒழுக்கம் நிறைந்த அடக்கமுடையவனிடம் தற்பெருமையிராது, மறவாதே.

782. ஏ மனமே! பிறரை நீ கேலிசெய்வாயானுல் உனது உழைப்பே கேலிக் கூத்தாகி விடும்படி செய்துவிடுவார்கள், ஜாக்ரதை, மறவாதே.

783. ஏ மனமே! நல்லறிவை உண்டாக்கும் கல்வியின் நேர் விரோதி பேராசை ஜாக்ரதை.

784. ஏ மனமே! ஆசையுள்ளவன் மனம் காற்றைப் போல் சஞ்சரித்துக்கொண்டே இருக்கும், மறவாதே.

785. ஏ மனமே! சந்தேகமே உனது மூளையின் துருவாகும், மறவாதே.

786. ஏ மனமே! பொய்யான முகஸ்துதிக்கு ஆசைபடுகிற முட்டாள் தவறுகளைத் துணிந்து செய்வன் மறவாதே.

787. ஏ மனமே! எவனிடம் நல்லறிவும், நற்குணமும் நிரம்பி இருக்கிறதோ அவன் பிறரைக் கேலி செய்யமாட்டான், மறவாதே.

788. ஏ மனமே! ஆசையிருப்பவன் கொடிய

பாவத்தை சுறுசுறுப்புடன் அழகாகக் கவலையின்றிச் செய்துவிடுவன் மறவாதே.

789. ஏ மனமே! பாவங்களை உண்டு பண்ணும் வித்து சுய நலமாகும், ஜாக்ரதை மறவாதே.

790. ஏ மனமே! சந்தேகம் கறையான் போன்றதாகும் ஜாக்ரதை, மறவாதே.

791. ஏ மனமே! போக்கிரியானவன் கேட்பது கிட்டும் வரை உன்னை முகஸ்துதி செய்வான். கிட்டவில்லையென்றால் உடனடியாகவே விஷம் நிறைந்த வார்த்தைகளால் உன்னை தூஷிக்கத் துடங்கிவிடுவன், ஜாக்ரதை, மறவாதே.

792. ஏ மனமே! நீ பிறரைக் கேலி செய்வதை பார்த்துக்கொண்டிருக்கும் உனது மனச்சாட்சி உன்னைப் பார்த்து உன் நிலையைக் கண்டு கேலி செய்து கொண்டிருப்பதை நீ மறந்துவிடாதே.

793. ஏமனமே! சுயநலமுள்ளவனுக்கு நல்லகாலம் இம்மையிலும் மறுமையிலும் இல்லை, மறவாதே.

794. ஏ மனமே! சந்தேகமே மாயையாகும் மாயையின் திருவிளையாடலினால் நீ அவதிப்படுகிறாய் ஜாக்ரதை, மறவாதே.

795. ஏ மனமே! முகஸ்துதியானது உன்னை முட்டாளாக்கி விடுவதுடன் ஏமாற்றியும் விடும் என்பதையும் மறவாதே.

796. ஏ மனமே! அக்ஞானி பெண்ணையும், பொன்னையும் மண்ணையும் தனது உயிராக நினைப்பன். மூன்றுமே உயிரை வாங்கிவிடும் என்பதை நீ மறந்துவிடாதே.

797. ஏ மனமே! அன்பு மாத்திரம் போதாது. பணிவும் அடக்கமும் உனக்கு அவசியம் வேண்டுமென்பதை மறவாதே.

798. ஏ மனமே! பலகோடி ரூபாய்கள் ஒருவனிடம் இருப்பினும் அந்த ரூபாய்கள் அவன் பசியை போக்கிவிடாது. உணவே பசியைப்போக்கும். உணவைப்பெருக்கு அன்னதானத்தைச் செய், மறந்துவிடாதே.

799. ஏ மனமே! தனலட்சுமி எனப் போற்றும் பணத்தை அறிவுள்ள முட்டாள்கள் ஊதாரித்தனமாக அதர்மத்திற்குச் செலவு செய்வார்கள்நல்லறிவுடைய மனிதனே தேவர்களும், மேன் மக்களும் தேசமுமே போற்றிப்புகழும்படி செலவு செய்வன் மறவாதே.

800. ஏ மனமே! செல்வம் தாய், தகப்பன், மனைவி, மக்கள் சுற்றத்தார்கள் உள்பட அனைவரையுமே மறக்கச் செய்துவிடும் ஜாக்ரதை, மறவாதே.

801. ஏ மனமே! பேச்சை மிகவும் சிக்கனமாக்கிக் கொண்டு தொண்டினை விரிவாக்கிக் கொண்டு விடுவையானால் நல்லன அனைத்தும் உன்னிடம் பெருக்கெடுக்கும் மறவாதே.

802. ஏ மனமே! காட்டுத்தீயைப் போன்றது வறுமை அந்தத் தீயினிடம் இருந்து எதையுமே தக்கவைத்துக் கொண்டுவிட முடியாது ஜாக்ரதை மறவாதே.

803. ஏ மனமே! கடன் இல்லாதவன் ஒருவனே கவலையற்றிருந்து வரமுடியும் மறவாதே.

804. ஏ மனமே! உனக்கு முதலில் வேண்டிய

குறையற்ற செல்வம் என்பதெல்லாம் நல்ல அறிவொன்றேயாகும் என்பதை மறவாதே.

805. ஏ மனமே! ''நான் யார்'' என உனக்குள் கேட்பாயானுல் உலகிலேயே நீ நல்லதொரு பிரம்மஞானியாகி விடுவாய், மறவாதே.

806. ஏமனமே! அடக்கமற்ற நீ, எப்படித்தலேவனுக முடியும் சொல், மறவாதே.

807. ஏ மனமே! பணத்திமிரானது உனக்குத் தீய வழியைக் காட்டும் சத்ருவாகும், மறவாதே.

808. ஏ மனமே! தவருன வழியில் வந்த தனம் எப்படிப்பட்ட நல்லவன் மனத்தையும் தவருன வழிக்கு இழுத்துக்கொண்டு சென்றுவிடும் ஜாக்ரதை, மறவாதே.

809. ஏ மனமே! த்ரவ்யம் அளவுக்கு மிஞ்சிப் பெருகுமானுல் மன அமைதியானது அறவே உனக்குள் இருந்து மறைந்தோடி விடும் மறவாதே.

810. ஏ மனமே! உலகில் உள்ள ஒவ்வொரு கஞ்சனும் தன்னிடத்தில் இருப்பதை மறைத்துக் கொண்டு மேலும் பிச்சையெடுத்தும் சேர்த்து வைப்பன் மறவாதே.

811. ஏ மனமே! வறுமையானது முதலில் குணத்தைக் கெடுத்துக் கொண்டு மனிதனே அழித்துவிடும் ஜாக்ரதை.

812. ஏ மனமே! பிச்சைக்காரனுக்குக் கொடுக்கும் மதிப்பே, கடன் வாங்கினவனுக்கும் கிட்டும் ஜாக்ரதை.

813. ஏ மனமே! பணம் குணத்தைக் கெடுப்பதுடன் குலம் கோத்ரம் எல்லாவற்றையுமே கெடுத்துவிடும் மறவாதே.

814. ஏ மனமே! உன்னிடமிருந்து வரும் திமிருக்குக் காரணம் அனித்யமெனப்படும் தனமாகும் ஜாக்ரதை மறவாதே.

815. ஏ மனமே! பொய்ப் பொருளினுல் அருளை விலைக்கு வாங்கிவிட முடியாது ஜாக்ரதை மறவாதே.

816. ஏ மனமே! உன்னிடமுள்ள செல்வத்தை உனது கைக்கு ஒரு கருவியாக்கிக் கொண்டு விடுவையாளுல் நீ க்ஷேமத்துடன் அதாவது மன அமைதியுடன் இருந்து வரலாம், மறவாதே.

817. ஏ மனமே! அயோக்யனின் மிக முக்யமான வேலை பிறர் சொத்தை எல்லாம் தன்னிடமுள்ள தந்திரத்தினுல் தனதாக்கிக் கொண்டு விடுவதேயாகும்.

818. ஏ மனமே! நாட்டில் ஏழைகள் மேலும் அதிகரித்து விடுவார்களானுல் பணக்காரர்களின் வீடுகள் அனைத்தையுமே திருடர்கள் சூறையாடி விடுவார்கள், ஜாக்ரதை.

819. ஏ மனமே! முட்டாளிடம் வண்டி வண்டியாய் புத்திமதிகளைச் சொன்னுலும் பிரயோஜனப்படாது. நாயின் வாலைப் போன்ற அவனை எவனுல் திருத்தமுடியும். மறவாதே.

820. ஏ மனமே! வாங்கின கடனை

கொடுக்காவிட்டால் கடன் வாங்கினவன் வீட்டு நாயாய் பிறப்பான் ஜாக்ரதை.

821. ஏ மனமே! மனத்திற்காக எதையும் துணிந்து செய்துவிடாதே, ஜாக்ரதை, மறவாதே.

822. ஏ மனமே! அறிவில்லாதவனிடம் பொருள் சேருமாயின் அவனுக்கும் அவன் குடும்பத்திற்கும் நாட்டிற்குமே அனர்த்தம் மேலிடும், மறவாதே.

823. ஏ மனமே! அழியக் கூடிய தனத்திற்கு அடிமையாகி விட்டாய். உண்மையான சுதந்திரத்தைப் பற்றிப் பேசினுல் மட்டும் விடுதலே கிட்டி விடாது, ஜாக்ரதை.

824. ஏ மனமே! நீ கோடீஸ்வரனுக இருப்பதால் எமனிடம் லஞ்சத்தைக் கொடுத்து தப்பிவிடலாம் என்று நினைத்துவிடாதே. கடவுளை நம்பு தப்புவாய். எமனை எவராலும் ஏமாற்றி விடமுடியாது, மறவாதே.

825. ஏ மனமே! உலகில் அக்ஞானிகளாகிய மூடர்களிடத்திலும் கோடிக்கணக்காகவும் லக்ஷக்கணக்கிலும் தனம் இருக்கிறது. அதனுல் அவர்களிடம் கடவுளின் திருவருள் பரிபூரணமாக இருப்பதாக நீ நம்பிவிடாதே.

826. ஏ மனமே! கையில் பணம் இருக்கும் முட்டாள்கள் தனது மூடத்தனத்திஞல் துணிச்சலுடன் பிறருக்குக் கேட்டை உண்டாக்கி வருவான் ஜாக்ரதை, மறந்து விடாதே.

827. ஏ மனமே! ஞானமில்லாதவனின் அறிவு சூனியமாகவே இருக்கும், மறவாதே.

828. ஏ மனமே! முட்டாளுக்கு சலுகை காட்டுவாயானல் அவனுடைய இருப்பிடத்தையும் தேவீ பற்றிக்கொண்டு விடுவள், மறவாதே.

829. ஏ மனமே! உலகில் கடன் வாங்கினவன் வாங்கின கடனை மறந்துவிடுகிருன். கடன் கொடுத்தவனே கொடுத்த கடனை ஞாபகத்தில் வைத்துக் கொண்டு மனம் தவித்து வருந்தி தடுமாறுகிருன், மறவாதே.

830. ஏ மனமே! படகில் ஓட்டையிருப்பின் தண்ணீர் புகுந்து விடுவதைப்போல மனிதனிடம் ஆசையிருப்பின் பிறவி பெருகிக் கொண்டே போகும், மறவாதே.

831. ஏ மனமே! அறிவுள்ள நீ முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது என்னவென்ருல் அன்புடன் அடக்கமாக இருந்துகொண்டு பொறுமையுடன் பணிவோடு பேசவேண்டுமென்பதேயாகும், மறவாதே.

832. ஏ மனமே! நீ அனுபவிக்கும் சந்தோஷம் மண்ணிடத்திலும் இல்லை பெண்ணிடத்திலும் இல்லை, பொன்னிடத்திலும் இல்லை. அந்த சந்தோஷம் எல்லாமே உனக்குள்ளே தான் இருக்கிறதென்பதை நீ மறந்துவிடாதே, ஜாக்ரதை.

833. ஏ மனமே! அனித்யமெனப்படும் தனமானது உனக்கு அதந்தையை உண்டாக்கி மனச்சாட்சியை அடியோடு மறைத்துவிடும், ஜாக்ரதை, மறவாதே.

834. ஏ மனமே! கஞ்சனிடமுள்ள பணப்பெட்டியின் சாவியைப் பிடுங்கிக் கொள்ள பத்னி, புத்ரர்கள் மற்றுமுள்ள தாயாதிகள் அனைவருமே காத்துக் கொண்டிருக்கிறார்கள், மறவாதே.

835. ஏ மனமே! ஸாதுக்களைத் துன்புறுத்துவாயானால் அவர்கள்மனவேதனை உன்னையும் உனது குலத்தையும் சாம்பலாக்கிவிடும், மறவாதே.

836. ஏ மனமே! காற்றும், தரித்திரமும் நுழையாத இடம் இருது, ஜாக்ரதை, மறவாதே.

837. ஏ மனமே! கடன் கேட்பவன் கவலையொன்றின் பொய் சொல்வான் கடன் கொடுத்தவன் கவலைப்பட்டு மடிவன் மறவாதே.

838. ஏமனமே! தனம் இருப்பவனிடம் நல்ல மனம் இருது, ஜாக்ரதை, மறவாதே.

839. ஏமனமே! நல்ல கண்ணையும் மறைத்து விடும் செல்வச் செருக்கினால் திமிருடையவர் களையெல்லாம் அவர்களிடம் இருக்கும் தனலெக்ஷ்மியே சபித்து விடுவதால் அந்த செல்வச் செருக்குடைவனோடு அவன் சந்ததியும் கெட்டுப் போகிறார்கள் ஜாக்ரதை, மறவாதே.

840. ஏ மனமே! தெய்வங்களையும் அன்பு கட்டுப்படுத்திவிடும், மறவாதே.

841. ஏ மனமே! தன்னிடமுள்ள தனலட்சுமியை ஊதாரி தனமாக கெட்ட வழிகளுக்கும் அதர்மத்திற்கும் உபயோகிப்பவன் வடி

கட்டினமூடன், அந்த முட்டாளிடம் அறிவாய் வந்ததினுல் அவனிடம் மூதேவி குடியேறி விடுவள் ஜாக்ரதை, மறவாதே.

842. ஏ மனமே! பணமுள்ளவன் நிம்மதியாக தூங்கமாட்டான். ஸொப்பனத்திலும் திரவியம் இருப்பவன் பயப்படுவன் ஜாக்ரதை, மறவாதே.

843. ஏ மனமே! அறிவு கெட்ட முட்டாளின் மூளையில் சைதான் எனப்படும் பேய் பிசாசுகள் வாஸம் செய்து வருவதை நீ மறந்துவிடாதே.

844. ஏ மனமே! வறுமையைக் கண்டு அஞ்சாதே, உண்மையைக்கண்டுகொண்டு ஊக்கத்துடன் இருந்துவா, மறவாதே.

845. ஏ மனமே! பிறரைக் கண்டு நீ சிரிப்பாயாஞல் உன்னைக்கண்டு அனைவருமே சிரிக்கும் காலம் வந்துவிடும், ஜாக்ரதை.

846. ஏ மனமே! கடன் வாங்கி விட்டால் தலை நிமிர்ந்து நடக்கமுடியாது ஜாக்ரதை மறவாதே.

847. ஏ மனமே! பகுத்தறிவு இல்லாத தேனீ, சேகரித்த தேனை பகுத்தறிவுள்ளவன் பகலில் கொள்ளையடித்துக் கொண்டு போவதைப் போல லோபிப்பயலிடம் இருக்கும் தனத்தை எல்லாம் கொலை பாதகர்கள் பகலில் கொள்ளை கொண்டு போவதை நீ மறவாதே.

848. ஏ மனமே! தீயவழியில் செல்கிறவர்களை தேவர்கள் சாபமிடுவதுடன் மனைவி மக்களும் பந்து மித்ரர்களுளும் சபிப்பார்கள் என்பதை

நீ மறந்துவிடாதே.

849. ஏ மனமே! மனித சமூகமே பேராசையினுல் பேயைப் போல் அலேந்து வருகிறதை மறவாதே.

850. ஏமனமே! தானதர்மம் என்பதறியாத உலோபி தனது ஆயுளுக்குள் ஒரு நாளும் சுகப்படமாட்டான். மறுபிறவியில் பூதங்களாகப் பிறந்து புதையல்களேக் காவல் காத்து வருவன், மறவாதே.

851. ஏ மனமே! உனது அறிவைக் கெடுப்பது மற்றவர்கள் அல்ல அது உனக்குள்ளிருக்கும் ஆசையின் வேலேயாகும், ஜாக்ரதை மறவாதே.

852. ஏ மனமே! உலகில் தகாத காரியங்களே மக்கள் செய்கிருர்கள் என்ருல் அதற்குக் காரணம் வறுமையாகும். மிகக்கொடுமையான வறுமை இருப்பவன் தகாததை எல்லாம் துணிந்து செய்வன் என்பதை நீ மறவாதே.

853. ஏமனமே! கொடுத்த கடனேக் கேட்பாயானுல் நீயும் ஒரு கொடிய பாவி என்று கடன் வாங்கினவன் உன்னேப்பற்றி பிரச்சாரம் செய்வான், மறவாதே.

854. ஏ மனமே! கொடுத்த கடனேக் கேட்டால் நீண்டகால நண்பனும் பகைவனுகிருன், மறவாதே.

855. ஏ மனமே! பாவியான மனிதன் அனித்யமான தனத்தைச் சரணடைந்து இடைவிடாத துன்பத்திற்கே ஆளாகிவிடுகிருன், மறவாதே.

856. ஏ மனமே! உலகிலேயே பேராசையுடைய

கட்டினமூடன், அந்த முட்டாளிடம் அறிவாய் வந்ததினுல் அவனிடம் மூதேவி குடியேறி விடுவள் ஜாக்ரதை, மறவாதே.

842. ஏ மனமே! பணமுள்ளவன் நிம்மதியாக தூங்கமாட்டான். ஸொப்பனத்திலும் திரவியம் இருப்பவன் பயப்படுவன் ஜாக்ரதை, மறவாதே.

843. ஏ மனமே! அறிவு கெட்ட முட்டாளின் மூளையில் சைதான் எனப்படும் பேய் பிசாசுகள் வாஸம் செய்து வருவதை நீ மறந்துவிடாதே.

844. ஏ மனமே! வறுமையைக் கண்டு அஞ்சாதே, உண்மையைக்கண்டுகொண்டு ஊக்கத்துடன் இருந்துவா, மறவாதே.

845. ஏ மனமே! பிறரைக் கண்டு நீ சிரிப்பாயாஞல் உன்னைக்கண்டு அனைவருமே சிரிக்கும் காலம் வந்துவிடும், ஜாக்ரதை.

846. ஏ மனமே! கடன் வாங்கி விட்டால் தலை நிமிர்ந்து நடக்கமுடியாது ஜாக்ரதை மறவாதே.

847. ஏ மனமே! பகுத்தறிவு இல்லாத தேனீ, சேகரித்த தேனை பகுத்தறிவுள்ளவன் பகலில் கொள்ளையடித்துக் கொண்டு போவதைப் போல லோபிப்பயலிடம் இருக்கும் தனத்தை எல்லாம் கொலை பாதகர்கள் பகலில் கொள்ளை கொண்டு போவதை நீ மறவாதே.

848. ஏ மனமே! தீயவழியில் செல்கிறவர்களை தேவர்கள் சாபமிடுவதுடன் மனைவி மக்களும் பந்து மித்ரர்களுளும் சபிப்பார்கள் என்பதை

நீ மறந்துவிடாதே.

849. ஏ மனமே! மனித சமூகமே பேராசையினுல் பேயைப் போல் அலைந்து வருகிறதை மறவாதே.

850. ஏமனமே! தானதர்மம் என்பதறியாத உலோபி தனது ஆயுளுக்குள் ஒரு நாளும் சுகப்படமாட்டான். மறுபிறவியில் பூதங்களாகப் பிறந்து புதையல்களைக் காவல் காத்து வருவன், மறவாதே.

851. ஏ மனமே! உனது அறிவைக் கெடுப்பது மற்றவர்கள் அல்ல அது உனக்குள்ளிருக்கும் ஆசையின் வேலையாகும், ஜாக்ரதை மறவாதே.

852. ஏ மனமே! உலகில் தகாத காரியங்களை மக்கள் செய்கிருர்கள் என்ருல் அதற்குக் காரணம் வறுமையாகும். மிகக்கொடுமையான வறுமை இருப்பவன் தகாததை எல்லாம் துணிந்து செய்வன் என்பதை நீ மறவாதே.

853. ஏமனமே! கொடுத்த கடனைக் கேட்பாயானுல் நீயும் ஒரு கொடிய பாவி என்று கடன் வாங்கினவன் உன்னைப்பற்றி பிரச்சாரம் செய்வான், மறவாதே.

854. ஏ மனமே! கொடுத்த கடனைக் கேட்டால் நீண்டகால நண்பனும் பகைவனுகிருன், மறவாதே.

855. ஏமனமே! பாவியான மனிதன் அனித்யமான தனத்தைச் சரணடைந்து இடைவிடாத துன்பத்திற்கே ஆளாகிவிடுகிருன், மறவாதே.

856. ஏ மனமே! உலகிலேயே பேராசையுடைய

கட்டினமூடன், அந்த முட்டாளிடம் அறிவாய் வந்ததினுல் அவனிடம் மூதேவி குடியேறி விடுவள் ஜாக்ரதை, மறவாதே.

842. ஏ மனமே! பணமுள்ளவன் நிம்மதியாக தூங்கமாட்டான். ஸொப்பனத்திலும் திரவியம் இருப்பவன் பயப்படுவன் ஜாக்ரதை, மறவாதே.

843. ஏ மனமே! அறிவு கெட்ட முட்டாளின் மூளையில் சைதான் எனப்படும் பேய் பிசாசுகள் வாஸம் செய்து வருவதை நீ மறந்துவிடாதே.

844. ஏ மனமே! வறுமையைக் கண்டு அஞ்சாதே, உண்மையைக்கண்டுகொண்டு ஊக்கத்துடன் இருந்துவா, மறவாதே.

845. ஏ மனமே! பிறரைக் கண்டு நீ சிரிப்பாயாஞல் உன்னைக்கண்டு அனைவருமே சிரிக்கும் காலம் வந்துவிடும், ஜாக்ரதை.

846. ஏ மனமே! கடன் வாங்கி விட்டால் தலை நிமிர்ந்து நடக்கமுடியாது ஜாக்ரதை மறவாதே.

847. ஏ மனமே! பகுத்தறிவு இல்லாத தேனீ, சேகரித்த தேனை பகுத்தறிவுள்ளவன் பகலில் கொள்ளையடித்துக் கொண்டு போவதைப் போல லோபிப்பயலிடம் இருக்கும் தனத்தை எல்லாம் கொலை பாதகர்கள் பகலில் கொள்ளை கொண்டு போவதை நீ மறவாதே.

848. ஏ மனமே! தீயவ்ழியில் செல்கிறவர்களை தேவர்கள் சாபமிடுவதுடன் மனைவி மக்களும் பந்து மித்ரர்களுளும் சபிப்பார்கள் என்பதை

நீ மறந்துவிடாதே.

849. ஏ மனமே! மனித சமூகமே பேராசையினுல் பேயைப் போல் அலேந்து வருகிறதை மறவாதே.

850. ஏமனமே! தானதர்மம் என்பதறியாத உலோபி தனது ஆயுளுக்குள் ஒரு நாளும் சுகப்படமாட்டான். மறுபிறவியில் பூதங்களாகப் பிறந்து புதையல்களேக் காவல் காத்து வருவன், மறவாதே.

851. ஏ மனமே! உனது அறிவைக் கெடுப்பது மற்றவர்கள் அல்ல அது உனக்குள்ளிருக்கும் ஆசையின் வேலேயாகும், ஜாக்ரதை மறவாதே.

852. ஏ மனமே! உலகில் தகாத காரியங்களே மக்கள் செய்கிருர்கள் என்ருல் அதற்குக் காரணம் வறுமையாகும். மிகக்கொடுமையான வறுமை இருப்பவன் தகாததை எல்லாம் துணிந்து செய்வன் என்பதை நீ மறவாதே.

853. ஏமனமே! கொடுத்த கடனேக் கேட்பாயானுல் நீயும் ஒரு கொடிய பாவி என்று கடன் வாங்கினவன் உன்னேப்பற்றி பிரச்சாரம் செய்வான், மறவாதே.

854. ஏ மனமே! கொடுத்த கடனேக் கேட்டால் நீண்டகால நண்பனும் பகைவனுகிருன், மறவாதே.

855. ஏ மனமே! பாவியான மனிதன் அனித்யமான தனத்தைச் சரணடைந்து இடைவிடாத துன்பத்திற்கே ஆளாகிவிடுகிருன், மறவாதே.

856. ஏ மனமே! உலகிலேயே பேராசையுடைய

மனிதன் எவனே, அவனே மிகக் கொடிய தரித்திரத்தின் பிடியில் சிக்கிக் கொண்டவனுவன், மறவாதே.

857. ஏ மனமே! நாட்டில் முட்டாள்களிடம் கோடிக்கணக்காக பணக்குவியல் இருக்கிறது. பஞ்சப் பாட்டைப் பாடுகிருர்கள், மறவாதே.

858. ஏ மனமே! உலோபிப்பயல்கள் தானும் சாப்பிடமாட்டான் பிறருக்கும் கொடுக்கமாட்டான். தன்னிடமுள்ளதைப் புதைத்து வைத்து மடிந்துபோவன், மறவாதே.

859. ஏ மனமே! ஒவ்வொரு ஆசையும் ஒவ்வொரு ஓட்டையாகும். ஒரு ஓட்டை ஒரு கப்பலை மூழ்கடித்துவிடுமென்ருல் உன்னிடம் எத்தனை ஓட்டைகள் இருக்கிறதென்பதை கணக்கிட்டுப் பார்த்துக்கொள் ஜாக்ரதை, மறவாதே.

860. ஏ மனமே! நீ ஸொப்பனத்திலும் பிறரைச் சார்ந்திராதே, மறவாதே.

861. ஏ மனமே! கடன் வாங்குவது கோடி துன்பத்தை விலை கொடுத்து வாங்குவதற்கு ஸமானமாகும் ஜாக்ரதை மறவாதே.

862. ஏ மனமே! நட்பை முறித்துக் கொண்டுவிட வேண்டுமென்ருல் கடன் கொடுத்துவிடு, மறவாதே.

863. ஏ மனமே! நற்குணமில்லதவனிடம் பணம் மட்டும் இருந்தால் இழிவான செயல்களையே துணிந்து செய்வன், மறவாதே.

864. ஏ மனமே! உனக்குள் உலகை காணுதே.

முதலில் உன்னைக் கண்டுகொள், மறவாதே.

865. ஏ மனமே! நல்லறிவோடு நல்ல புத்திசாலித்தனமும், நல்ல தனமும் இருப்பவனே உண்மையில் நல்ல பாக்கியசாலியாவன், மறவாதே.

866. ஏ மனமே! நல்ல நினைப்பையும் நல்ல தொண்டினையும் சிக்கனமாக்கிக் கொள்வதால் உனக்கு மேலும் நஷ்டமே உண்டாகும் என்பதை மறவாதே.

867. ஏ மனமே! மனிதன் கொடிய தீமைகளை செய்வதற்குக் காரணம் அவனிடமுள்ள வறுமைப் பிணியேயாகும், மறவாதே.

868. ஏ மனமே! உன்னிடம் தனம் இருக்கும் போது நீ வாங்கிய கடனை திருப்பிக் கொடுக்காவிட்டால் உன்னை மக்கள் மஹாபாவி என்று அழைப்பார்கள், மறவாதே.

869. ஏ மனமே! அரைநயாபைசாசிலவும் இல்லாத தர்மம், நல்லதை உறுதியாக நினைப்பதொன்றேயாகும், மறவாதே.

870. ஏ மனமே! திருவருளோடு பொருளும் இருப்பவனே சந்தோஷத்துடன் நீதி தவறாது வாழ்ந்து வருவன் மறவாதே.

871. ஏ மனமே! பிறருக்கு உதவி செய்யத் தெரியாத நீ, மற்றவரை குறை கூறுவது வெட்கக்கேடான காரியமாகும், மறவாதே.

872. ஏ மனமே! உலகில் கோடீஸ்வரன் என்கிறவனும் துக்கப்படுகிறான், அதனால் மனமே தனமானது மனிதனின் துக்கத்தை

அறவே போக்கி விடாது, ஜாக்ரதை மறவாதே.

873. ஏ மனமே! உலகில் பொய்ப் பொருளான மண், பொன், பெண்களால் கெட்டவர்களை கணக்கெடுத்துவிட கடவுளாலும் முடியாது, மறவாதே.

874. ஏ மனமே! அளவுக்கு மிஞ்சிய செலவும் அளவுக்கு மிஞ்சிய சிக்கனமும் தரித்திரத்தை மேலும் மேலும் உண்டாக்கிவிடும், ஜாக்ரதை மறவாதே.

875. ஏ மனமே! கஷ்டப்பட்டு நீ தேடிய செல்வமே உன்னைக் கொன்றுவிடும். முன் ஜாக்ரதையாகி விடு மறவாதே.

876. ஏ மனமே! வறுமை உள்ளவனிடம் அன்பிராது, பண்பிருது மேலும் மன உறுதியும் ஊக்கமும் இருது. நேர்மை, உண்மை சத்யமெல்லாம் மறந்து போய் விடுகிறதை நீ மறவாதே.

877. ஏ மனமே! கடலில் அலைகூட ஓய்வெடுக்கும் ஆனுல் கடன்காரன் மனம் அலை பாய்ந்துகொண்டிருப்பதால் ஓய்வெடுக்க முடியாது, மறவாதே.

878. ஏ மனமே! பொருமையுள்ளவன் எவரையுமே மதிக்கமாட்டான் அவனிடமுள்ள பொருமை தீயே முடிவில் அவனை எரித்துவிடும் ஜாக்ரதை, மறவாதே.

879. ஏ மனமே! பணத்தை இரும்புப் பெட்டியில் எவரும் அறியாமல் மறைத்து வைப்பதும் புதைத்து வைப்பதும் லோபிகளின்

வேலையாகும் என்பதை நீ மறவாதே.

880. ஏ மனமே! உலகில் குறையற்ற செல்வம் உனக்குள் இருக்கும் நல்லறிவாகும். அறிவிலிருந்து அதை உபயோகிக்கத் தெரியாத மனிதனே மிகக் கொடிய வறுமையுடையவனுவன், மறவாதே.

881. ஏ மனமே! பிறர் மெச்சுவதற்காக தர்மம் செய்துவருகிறவனின் மனம் தானம் கொடுத்த பிறகு, ஐயோ பணம் போய்விட்டதே என்று கவலைப்படும், மறவாதே.

882. ஏ மனமே! தானம் கொடுத்து விடு தானம் கொடுப்பதொன்றே உனது கடமை! கொடுப்பதால் மட்டுமே அருள்கிட்டும், மறவாதே.

883. ஏ மனமே! அன்னதானம் ஒன்றே ஒருவனுக்கு உயிரைக் கொடுத்த புண்ணியம் கிட்டும், மறவாதே.

884. ஏ மனமே! பிறந்தது முதல் கவலையற்றிருப்பவனிடம் பணத்தைக் கொடுத்து வைப்பாயானுல் அவன் அதைக் காப்பாற்ற கவலைப்பட்டு மடிந்து போவன், மறவாதே.

885. ஏ மனமே! மானம் போனவன் உயிர் வாழ்ந்திருக்க ஆசைப்படலாகாது.

886. ஏ மனமே! பிறரைக்குறை சொல்கிறவனும் பிறருடைய ரகசியத்தை அம்பலப்படுத்துகிறவனையும் முற்றிலும் நம்பாதே, ஜாக்ரதை.

887. ஏ மனமே! உனக்கு எவன் விரோதியோ

அவனிடம் நெருங்கிய நட்புள்ளவனிடமும் நீ மிக மிக ஜாக்ரதையுடன் இருந்துவா மறவாதே.

888. ஏ மனமே! நம்பிக்கை ஒன்றே காயகல்பமாகும். நம்புவாயாஞல் உனது உடலும் மனமும் அமைதியுடன் இருக்கும், மறவாதே.

889. ஏ மனமே! தன்னம்பிக்கையற்ற அனேவருமே மனித உருவத்தில் உயிருடன் கூடிய நடைபிணமாவார்கள், மறவாதே.

890. ஏ மனமே! குறையுள்ளமனமுடையவனே பிறரிடம் குறைகளைக் காண்பன், மறவாதே.

891. ஏ மனமே! உன்னிடம் கொடியதான ஆசையிருக்கும் வரை உனக்குள் உன்னே ஸதாகாலமும் துன்பப்படுத்தும் துக்கத்திற்கு பஞ்சமிராது, மறவாதே.

892. ஏமனமே! பேராசையுள்ளவனின் மனது கடல் அலேபோல் இருக்கும் மறவாதே.

893. ஏ மனமே! கண்களை உனது இமை காப்பாற்றுவது போல் உனது மானத்தை அதன் போக்கில் விடாது நீ காப்பாற்றிக் கொண்டுவா, மறவாதே.

894. ஏ மனமே! பொருமை நல்ல பாம்பின் விஷம் போன்றது ஜாக்ரதை மறவாதே.

895. ஏ மனமே! அறிவிலிகளுடன் நட்பு வைத்துக் கொள்வாயாஞல் உனது மானம் போய்விடும் ஜாக்ரதை மறவாதே.

896. ஏ மனமே! முதலில் உனக்கு நம்பிக்கை

வேண்டும். பிறகு அதை மற்றவர்களுக்கு உபதேசிப்பது நல்லது, மறவாதே.

897. ஏ மனமே! உண்மை ஒன்றையே நீ விடாப்பிடியாக உறுதியாக நம்பு, மறவாதே.

898. ஏ மனமே! உன்னுடைய நினைப்பிலும், சொல்லிலும் செயலிலும் இருந்துவரும் குற்றத்தை உனது மனச்சாட்சியிடம் கேள் உண்மையைச் சொல்லிவிடும், மறவாதே.

899. ஏ மனமே! பற்றுள்ளவனை அது கரையான் போல உன்னை அழித்துவிடும் ஜாக்ரதை, மறவாதே.

900. ஏ மனமே! ஆசையுள்ள வரை உனக்குப் பிறப்பும் உண்டு, மறவாதே.

901. ஏ மனமே! மானம் போன பின் அதைச் சந்தையில் விலை கொடுத்து வாங்க முடியாது. நீ முதலில் மானத்தைக் காப்பாற்று ஜாக்ரதை, மறவாதே.

902. ஏ மனமே! சுயநலமற்ற ஒருவனே மற்றவர்கள் ஷேமத்துடன் இருந்து வரவேண்டுமென உண்மையாக நினைப்பன் மறவாதே.

903. ஏ மனமே! சென்றதைத் திரும்ப நினைப்பதாலேயே மனம் வேதனை உண்டாகும் ஜாக்ரதை, மறவாதே.

904. ஏ மனமே! நம்பிக்கை துரோகம் செய்வாயானல் மிகக் கொடிய நரகவேதனையை நீ உயிருடன் இருக்கும்போதே அனுபவித்து விடுவாய், மறவாதே.

905. ஏ மனமே! நல்லறிவு மிக்க உண்மையான தொண்டன் ஒருவனே பிறருக்கு உபகாரமாக வாழ்ந்து வருவன் மறவாதே.

906. ஏ மனமே! பயபக்தி உள்ளவன் தான் செய்த தவற்றை எப்படி ஒப்புக் கொண்டுவிடுவன் மறவாதே.

907. ஏ மனமே! நெருப்பில் விடும் நெய், நெருப்பை விருத்தி செய்வதைப் போல் உனக்குள்ளிருக்கும் ஆசை ஒவ்வொன்றும் உன்னையும் உனது முகத்தையும் அழித்துவிடும் காட்டுத்தீயைப் போன்றதாகும், மறவாதே.

908. ஏ மனமே! ஆசை ஒரு பெரிய அடர்த்தி உள்ள காடு. அந்த காட்டில் கொடிய மிருகங்களைப் போல் கெட்ட எண்ணம் இருந்து வரும் ஜாக்ரதை, மறவாதே.

909. ஏ மனமே! உனது நண்பர்களிடம் ஒழுக்கம் எப்படி இருக்கிறதோ அப்படித்தான் உன்னிடமும் ஒழுக்கம் இருக்கும், மறவாதே.

910. ஏ மனமே! உனது நண்பனைப் போலவே உனது குணமும் இருந்துவரும். நண்பர்களை ஜாக்ரதையாகத் தேர்ந்தெடுத்துவா மறவாதே.

911. ஏ மனமே! அகடவிகட சாமர்த்தியத்துடன் அழகாகப் பேசும் போக்கிரியுடன் நட்புக் கொள்ளுதல் உனக்கு நல்லதல்ல, மறவாதே.

912. ஏ மனமே! நம்பிக்கையற்றவனின் மனம் கடல் அலை போல் அலைந்துகொண்டே இருந்துவரும், மறவாதே.

913. ஏ மனமே! மனிதனிடமுள்ள மெய்ப்

பொருளான ஆன்மாவைப்பார் எல்லோருடைய குற்றம் குறைகளைப் பாராதே, ஜாக்ரதை.

914. ஏ மனமே! பிறர் குற்றத்தை நீ சொல்வதைப் போல் உனது குற்றத்தை நீயில்லாத இடத்தில் சொல்வார்கள் ஜாக்ரதை, மறவாதே.

915. ஏ மனமே! போதும் என்கிற திருப்தி உள்ளவன் ஒருவனே மன அமைதியுடன் இருந்து வருவன் மறவாதே.

916. ஏ மனமே! நல்ல நெல் வயலுக்கு முதல் தரமான சத்ரு களைகளாகும். மனமே! உன்னுடைய சத்ருஆசைகளாகும், மறவாதே.

917. ஏ மனமே! ஒழுக்கமற்றவனோடும், பொய் பொறாமையுள்ளவனோடும் உறவாடாதே. ஜாக்ரதை.

918. ஏ மனமே! விஷம் என்று தெரிந்து கொண்டவுடன் அதனிடம் எப்படி பழகுவாயோ அப்படிக் கெட்ட குணமுடையவனிடம் பழகிவா, ஜாக்ரதை.

919. ஏ மனமே! நல்ல உத்தமர்களாக இருந்து வரும் நண்பர்கள் பெருகுவதால் துன்பம் குறையும் இன்பம் பெருகும், மறவாதே.

920. ஏ மனமே! தன்னம்பிக்கையற்றவனின் மனம் ஸதாகாலமும் பேய்போல் அலைந்து கொண்டு பிசாசைப் போல் பிறரைக் கொடுமைப் படுத்தி இம்ஸித்து வரும், மறவாதே.

921. ஏ மனமே! இன்று வரை நீ செய்த குற்றங்களையும், பாவங்களையும் நினைத்துப் பார்த்துக் கொண்டு மேலும் நீ அவைகளைச்

செய்யாமல் இருக்கும் தவத்தைச் செய்து வா மறவாதே.

922. ஏ மனமே! உன் குறைகள் எல்லாம் உனக்கு நன்கு தெரிந்திருந்தும் பிறரைக் குறைகூற நீ முன் வருவது உனக்கு வெட்கமாக இல்லையா? மறவாதே.

923. ஏ மனமே! உன்னிடமுள்ள நற்குணத்தின் முதல் தரமான பரம சத்ரு ஆசையாகும் மறந்துவிடாதே, ஜாக்ரதை.

924. ஏ மனமே! ஆசை அமாவாசை போன்றது. ஞானம் பட்டப்பகலை போன்றது, மறவாதே.

925. ஏ மனமே! பேராசை பிறந்தவுடன் அதன் கூடவே கபடமும் பொய்ப்பித்தலாட்டமும் பொறாமையும் விடாது பற்றிக்கொண்டு வரும், மறவாதே.

926. ஏ மனமே! கெட்ட குணமுடையவர்களின் பக்கத்திலும் நீ செல்லாதே ஜாக்ரதை, மறவாதே.

927. ஏ மனமே! மன்னிக்கும் குணமுள்ளவனுக்கு நண்பர்கள் நீடித்திருக்கமாட்டார்கள், மறவாதே.

928. ஏ மனமே! துரோக சிந்தனை உள்ளவன் எவனோ அவன் பொய் பேசுவான் வஞ்சனை செய்து பிறரைக் கெடுப்பன், மறவாதே.

929. ஏ மனமே! பிறருடைய குற்றத்தைப் பேசுவதே மிகப்பெரிய குற்றமாகும், மறவாதே.

930. ஏ மனமே! உலகில் மனிதனுகப் பிறந்தவன்

குற்றம் செய்யாமல் இருந்து வரமுடியாது, மறவாதே.

931. ஏ மனமே! உன்னிடமுள்ள ஆசை உனது புறக் கண்ணேயும் அகக்கண்களேயும் குருடாக்கி விடும் ஜாக்ரதை, மறவாதே.

932. ஏ மனமே! ஆசையுள்ளவன் மான்களேப் போல் மாட்டிக் கொண்டுவிடுவன், மறவாதே.

933. ஏ மனமே! பின்புறம் இருந்து கொண்டு உன்னேக் கெடுக்கும் நபர்கள் நேரில் வரும்போது இனிமையான வார்த்தைகளால் பேசி மயக்கும் கயவர்கள் என்பதை நீ மறவாதே.

934. ஏ மனமே! ஞானியும், அக்ஞானியும் நண்பனுக முடியாது, மறவாதே.

935. ஏ மனமே! உன்னிடம் எதையும் எதிர்பாராதவனேயே நண்பராக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

936. ஏ மனமே! தன்னம்பிக்கையுள்ள ஒருவனேயே தெய்வமும் தேவரும் போற்றுவார்கள், மறவாதே.

937. ஏ மனமே! உன்னே நீயே நான் தவறு செய்யாதவன் என்று கூறிக்கொள்வதே மிகப்பெரிய தவருகும், மறவாதே.

938. ஏ மனமே! குற்றத்தைப் போக்க வேண்டுமே தவிர, குற்றம் செய்த மனிதனே ஒழித்துவிடக் கூடாது.

939. ஏ மனமே! மனித சமூகத்தின் உள்ளே

சாஸ்வதமாக இருந்துவரும் அமைதியை அடியோடு கெடுக்கும் மனித குலத்தின் பரம் விரோதி ஆசை என்பதை நீ மறவாதே.

940. ஏ மனமே! ஆசையானது உண்மைகளை (சத்யத்தை) மறைத்துவிடும், ஜாக்ரதை.

941. ஏ மனமே! பொய்யும், பொறாமையும், கள்ளமும், கபடமும் நிறைந்தவர்கள் விஷம் கலந்த நல்ல பாலைப் போல் இருப்பார்கள், ஜாக்ரதை.

942. ஏ மனமே! கல்விமானும், மூட்டாளும், நண்பர்களாக இருக்கவே முடியாது, மறவாதே.

943. ஏ மனமே! நீ எதை உண்மையாக முழுமனத்துடன் நம்புகிறாயோ அதன் மயமாகவே நீ ஆகிவிடுவாய், மறவாதே.

944. ஏ மனமே! நம்பிக்கையுடையவனிடம் அளவிடமுடியாத திருப்தி இருக்கும், மறவாதே.

945. ஏ மனமே! இனிமேல் நான் யாரையும் குறை கூற மாட்டேன் என்கிற உறுதி மொழியை இக்கணமே எடுத்துக் கொண்டு விடு, மறவாதே.



# ஆத்ம போதனை

## ஸ்ரீ மத் சத்குரு சாந்தானந்த சுவாமிகள்

பாகம் – 2



வெளியீடு : ஸ்ரீ புவனேஸ்வரி சாரிடீஸ் டிரஸ்ட்
அதிஷ்டானம், புதுக்கோட்டை - 622 001.

ஓம் ஸ்ரீ ஸ்கந்தகுருவே நம:
ஓம் ஸ்ரீ அஷ்டதசபுஜ மஹாலக்ஷ்மி துர்காதேவ்யை நம:

## ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்தஸ்வாமிகள் அவர்களின்

# ஆத்ம போதனை

1. ஏ மனமே! இறைவனுடைய அருள் இருப்பவனிடம் சிறந்த சிந்தனை இருக்கும், மறவாதே.

2. ஏ மனமே! கடவுள் மனிதனின் உருவத்தில் உயிருடன் உலகில் நடமாடிக் கொண்டிருக்கிறார், நம்பு, மறவாதே.

3. ஏ மனமே! ஒரு கடவுளை முழுமனதுடன் உண்மையாக நம்பு, எல்லாத் தெய்வங்களும் உனக்கு ஏவல் செய்வார்கள், மறவாதே.

4. ஏ மனமே! உலகில் தொண்ணூற்றொன்பது பேர் பேராசைக்கு இரையாகி விடுகிறார்கள் என்பதை நீ மறந்துவிடாதே.

5. ஏ மனமே! நல்ல குணமுடையவனைப் புகழ் தானே தேடிவரும், மறவாதே.

6. ஏ மனமே! புகழுடன் வாழ்ந்து வர வேண்டுமென்றால் நற்பணிகளை முழு மனதுடன் உறுதியாகச் செய்துவிடு, மறவாதே.

7. ஏ மனமே! உடம்பை உணவு வளர்ப்பதைப் போல் கடவுள் நம்பிக்கை ஒன்றே உன்னை வளர்க்கும் மறவாதே.

8. ஏ மனமே! "நான் யார்" எனக்கேட்டுணர்கிறவனே விடுதலை பெறுவான், மறவாதே.

9. ஏ மனமே! பொய் சொல்லாத பெருந்தன்மை உடைய நல்லவர்களை நண்பனுக்கிக்கொள் மறவாதே.

10. ஏ மனமே! உனக்குள் அழிவற்ற ஆன்மாவானது பாலில் இரண்டறக் கலந்திருக்கும் நெய்போல் மறைந்திருப்பதை மறவாதே.

11. ஏ மனமே! பால் பசுவின் மடியில் தான் சுரக்கும், அது போல் உனது இதயத்தினுள்ளேதான் இறைவனருள் சுரக்கும், மறவாதே.

12. ஏ மனமே! உணவை மறவாதது போல் தினமும் பிரார்த்தனையையும் மறவாது செய்து வா, மறவாதே.

13. ஏ மனமே! அனைவருள்ளத்திலும் அன்பை விதைத்து வருவதே உனது கடமை, மறவாதே.

14. ஏ மனமே! நல்லது எது? கெட்டது எது? என்பதை நன்கு பகுத்துக் கண்டறிகிறவனே பகுத்திறவு உடையவனுவன், மறவாதே.

15. ஏ மனமே! மலரில் மணம் எப்படி இருக்கிறதோ அப்படி உனக்குள் கடவுள் இருக்கிருர், மறவாதே.

16. ஏ மனமே! ஆசையுள்ளவன் அடங்கி நடக்க மாட்டான், மறவாதே.

17. ஏ மனமே! கடமையை உறுதியாகச் செய்வதற்கு நல்ல புத்தியும், உடல் வலிமையும், நம்பிக்கையும், வேண்டும், மறவாதே.

18. ஏ மனமே! நீ செய்து விட்ட தவறுகளுக்காக வருந்தாதே. உடனடியாக கடவுளை உண்மையாக நம்பிவிடு. பரிசுத்த நிலையை அடைவாய், மறவாதே.

19. ஏ மனமே! மனிதாபிமான முள்ளவன் பிறருக்கு ஆறுதலைத் தருவன், மறவாதே.

20. ஏ மனமே! கடவுளை உண்மையாக நம்பி பிரார்த்தனை செய்வாயானால், நீயே இறைவனாக இருப்பதை உணர்வாய், மறவாதே.

21. ஏ மனமே! ரோஜாப்பூ முள் செடியில்தான் வரும், மறவாதே.

22. ஏ மனமே! ஒழுக்கத்தோடு கூடிய தியாகபுத்தியுடன் பணிவோடும் திட சித்தத்தோடும் பணி புரிந்துவா. மேன்மையடைவாய், மறவாதே.

23. ஏ மனமே! உலகத்தை நீ தெரிந்து கொள்வதற்கு முன்பு உன்னைத் தெரிந்துகொள், மறவாதே.

24. ஏ மனமே! உண்மை பேசு, ஆறுதல் கிடைக்கும், மறவாதே.

25. ஏ மனமே! ப்பாலில் கீழும், மேலும்,

நடுவிலும், எங்குமே வெண்ணெயானது வியாபித்து இருப்பதைப் போல் உனக்குள்ளும் வெளியிலும் பரம்பொருளாகிய உனதான்மா வியாபித்திருப்பதை நம்பு, மறவாதே.

26. ஏ மனமே! அனைத்துயிர்களுக்குள்ளும் கடவுள் ஒருவனே ஆன்மாவாக இருக்கிறார், மறவாதே.

27. ஏ மனமே! அன்பினிடமுள்ள சக்திவேறு எதற்குமே கிடையாது, மறவாதே.

28. ஏ மனமே! உண்மையான அன்பு ஒன்றே அடுத்தவர்களை நேசிக்கும், மறவாதே.

29. ஏ மனமே! பரம்பொருளிடம் பிரார்த்தனை உண்மையாக இருக்குமானால், நீயும் பரிசுத்தனாகிவிடுவாய், மறவாதே.

30. ஏ மனமே! கடவுளிடம் அசைக்க முடியாத உறுதியான நம்பிக்கை இருப்பின் அனைத்திலும் கடவுளைக் காண்பாய், மறவாதே.

31. ஏ மனமே! எவன் தனது உடலையும் உள்ளத்தையும் தூய்மையாக்கிக்கொண்டு விடுகிறானோ அக்கணமே அவன் அகத்துள் ஆன்மா பரஞ்சோதியாக பிரகாசிக்கும், மறவாதே.

32. ஏ மனமே! ஆட்சி புரிகிறவன் மனச்சாட்சிப்படி உறுதியாக நடக்க வேண்டும், மறவாதே.

33. ஏ மனமே! தகப்பனே பிள்ளையாகப்பிறப்பதால் எனது தந்தை

இறைவனுவன் என்பதை நான் மறக்கமாட்டேன்.

34. ஏ மனமே! தியானம் மனிதனை இம்மையில் மாமனிதனுக்கிவிடும், மறவாதே.

35. ஏ மனமே! கடவுளைத்தவிர உலகில் வேறென்று இல்லவே இல்லை என்பதுதான் சத்யம், மறவாதே.

36. ஏ மனமே! பாவத்தை அறவே போக்கிக் கொள் ள முற் றிலு ம் ஆசையற்றவனுகிவிடுவையாகுக, மறவாதே.

37. ஏ மனமே! நல்ல எண்ண முடையவனே நல்ல மனிதனுவன், மறவாதே.

38. ஏ மனமே! பிரார்த்திப்பதே உனது கடமை, கடவுள் உனக்கு எதுவேண்டுமென்பதை அறிந்துதருவான் மறவாதே.

39. ஏ மனமே! உனக்குள்ளே சென்று தியானம் செய்வாயானுல் உன்னையே நீ பரம் பொருளாக உணர்வாய் மறவாதே.

40. ஏ மனமே! கடவுளே உனது எஜமானன், மறவாதே, ஜாக்ரதை.

41. ஏ மனமே! துன்பமே கடவுளை ஞாபகப்படுத்தும், மறவாதே.

42. ஏ மனமே! கடவுளுக்கும் உனக்கும் இடையில் வேறெருவர் இருப்பதே நரகமாகும், மறவாதே.

43. ஏ மனமே! பிறரை ஏமாற்றுகிறவனைக் கடவுள் ஏமாற்றிச் சிறைக்கனுப்புவான்,

மறவாதே.

44. ஏ மனமே! குழந்தை தனது தாயை நம்பி விடுவதைப் போல் நீ கடவுளை நம்பிவிடுவதே உனது கடமை, மறவாதே.

45. ஏ மனமே! கடவுள் ஒருவனே நீ செய்யும் தவறை மன்னிப்பன், மறவாதே.

46. ஏ மனமே! பொறுமையுள்ளவன் துன்பக் கடலை சுலபமாக தாண்ட முடியும், மறவாதே.

47. ஏ மனமே! கடவுளிடம் உண்மையாக உனது தலை வணங்குமானால் மக்கள் அனைவருமே உன்னிடம் தலை வணங்குவார்கள், மறவாதே.

48. ஏ மனமே! மக்கள் அனைவரையுமே கடவுளாக நினைப்பதுவே உண்மையான பிரார்த்தனை மறவாதே.

49. ஏ மனமே! தன்னம்பிக்கையற்றவன் முட்டாள் என்பதை மறவாதே.

50. ஏ மனமே! கடவுளைத் தவிர வேறொன்று இல்லாததினால் கடவுளைத் தேடவேண்டிய வேலை இல்லை, மறவாதே.

51. ஏ மனமே! பொறுமை கல்மலைபோல் அசைவற்றிருப்பின் உனது மனம் கலங்காது, மறவாதே.

52. ஏ மனமே! கர்வமும் அலட்சியமும் இருப்பின் உன்னிடம் கவலை குடியேறிவிடும், மறவாதே.

53. ஏ மனமே! குறைகளை மனிதனிடம் கூறாதே

மாமனிதனிடம் கூறு, மறவாதே.

54. ஏ மனமே! எண்ணங்களே உனது கொடிய விரோதியாகும், மறவாதே.

55. ஏ மனமே! கடவுள் இருப்பதை நீ நம்பாவிட்டாலும் கடவுளானவர் உனக்குள் உனது ஆத்மாவாகவே இருந்துவருகிருர், மறவாதே.

56. ஏ மனமே! மிருகங்கள் பொய் சொல்லாது ஜாக்ரதை, மறவாதே.

57. ஏ மனமே! உள்ளன்புடன் உண்மையாகப் பணிபுரிகிறவனேயே மதித்து போற்றுவார்கள், மறவாதே.

58. ஏ மனமே! உன் இருதயத்தில் பொறுமை கல்மலேபோல் வளரட்டும், மறவாதே.

59. ஏ மனமே! வழக்கம் என்று சொல்லி உன்னே நீயே ஏமாற்றிக்கொள்ளாதே மறவாதே, ஜாக்ரதை.

60. ஏ மனமே! வட்டத்தின் நடுவில் ஒரு புள்ளியைப் போல் கடவுள் இருக்கிருன். வட்டத்தின் நடுவிற்கு நீ சுலபமாக எங்கிருந்து வேண்டுமாஞலும் செல்ல வழியுண்டு. அதஞல் உனது பாவத்தை நினைத்து நீ வருந்துவதை மறந்துவிட்டு கடவுளிடம் சுலபமாக சென்றுகலந்து விடு, மறவாதே.

61. ஏ மனமே! நீ இம்மையில் பெருமைப்பட வேண்டுமென்ருல் அன்பும், பணிவும், பொறுமையும் உனக்குள் இருக்கவேண்டும், மறவாதே.

62. ஏ மனமே! உனது பிரார்த்தனை அந்தரங்கத்தில் உண்மையாக இருக்கட்டும், மறவாதே.

63. ஏ மனமே! உலகில் உண்மைப் பொருள் உனது ஆத்மாவாகவே இருக்கிறது, மறவாதே.

64. ஏ மனமே! கடவுள் நம்பிக்கை ஒன்றே மலைபோன்ற பாவத்தைப் பொசுக்கிவிடும், மறவாதே.

65. ஏ மனமே! மனக் கண்ணை மூடிதியானம் செய். ஆன்மானுபவம் ஸித்திக்கும், மறவாதே.

66. ஏ மனமே! தீயவர்களைத் தேடுகிறவன் தீய மனிதனாக மாறிவிடுவன் ஜாக்ரதை.

67. ஏ மனமே! இறைவனுடைய மகிமையை மனிதனிடத்தில் மட்டும் சுலபமாகக் கண்டு கொள்ளமுடியும், மறவாதே.

68. ஏ மனமே! ''நான் யார்'' என உனக்குள் கேள். உண்மையான மெய்ப் பொருளாகவே நீ இருப்பதை உணர்வாய், மறவாதே.

69. ஏ மனமே! மனிதன் ஒருவனே பரம்பொருளை, ''நான்'' அந்தப் பரம பொருளாக இருக்கிறேன் என்று உணரமுடியும் மறவாதே.

70. ஏ மனமே! நல்லதொன்றையே நினைப்பது தான் பிரார்த்தனையாகும், மறவாதே.

71. ஏ மனமே! சோம்பேறியின் உடலில் பேய்

பிசாசுகள் வாசம் செய்யும், மறவாதே.

72. ஏ மனமே! கடவுள் உன்னை மனிதனாக பிறப்பித்து உள்ளது எதற்குத் தெரியுமா? பிரார்த்தனை செய்ய என்பதை மறவாதே.

73. ஏ மனமே! உண்மையான விசுவாசத்துடன் உறுதியாகக் கடமையைச் செய், மறவாதே.

74. ஏ மனமே! நேர்மையான நல்ல மனிதன் சட்டத்தை மீற மாட்டான், மறவாதே.

75. ஏ மனமே! உனது நண்பர்கள் நல்லறிவுடையவர்களாக இருப்பின் உனக்கும் தூயசிந்தனை பிறக்கும், மறவாதே.

76. ஏ மனமே! நீ பார்க்கும் அனைவரிடத்திலும் கடவுளாகவே இருந்துவரும் உனதான்மாவைப் பார்ப்பது தான் ஞானமாகும், மறவாதே.

77. ஏ மனமே! கடவுளுக்கு உன்னையே காணிக்யையாக்கிவிடு, மறவாதே.

78. ஏ மனமே! உனக்குள்ளேயுள்ள கடவுள் உன்னிடம் பேசக் காத்துக் கொண்டிருக்கிறார் கவனமாகக்கேள், மறவாதே.

79. ஏ மனமே! முட்டாள் ஒருவனே துணிந்து சட்டத்தை மீருவன், மறவாதே.

80. ஏ மனமே! அறச் செயல்களை அன்புடன் செய்வதே உனது கடமையாகும், மறவாதே.

81. ஏ மனமே! உனக்குள் இருந்து எல்லாவற்றையும் பார்ப்பவனே கடவுள், மறவாதே.

82. ஏ மனமே! உன் அகமாகிய கோயிலுக்குள் ஸ்வயம்புலிங்கமாக கடவுள் இருக்கிறான். பற்றற்ற மனத்துடன் அவனை நம்பி பக்தி செய்துவா, மறவாதே.

83. ஏ மனமே! கடவுளானவர் உனக்கு ஆழ்ந்த யோசனைகளைச் செய்ய உனக்குள்ளே காத்துக் கொண்டிருக்கிறார், மறவாதே.

84. ஏ மனமே! ஒரு நாணயத்தின் இரு புறமும் போன்றது அன்பும் கடவுளும், மறவாதே.

85. ஏ மனமே! ''நான் யார்'' என உனக்குள் சென்று கேட்டு உணர்வாயாயின் நீயும் உலகில் இருந்து வரும் சான்றோர் வரிசையில் வந்து விடுவாய், மறவாதே.

86. ஏ மனமே! ''நான் யார்'' என உனக்குள் ஊடுருவிச் சென்று கேட்பாயானால், தான் அல்லாதது அனைத்தும் இல்லாமல் போய்விடும்போது மிஞ்சுவது ''நான்'' என்றிருக்கும் பிரம்மமாகும், மறவாதே.

87. ஏ மனமே! உனது இதயத்தின் உள்ளே கடவுள் ''நான்'' ''நான்'' என்று இருந்து வருகிறார். அவரை நீ ''நான் யார்'' எனக் கேட்டால் மெய்ப் பொருளாகவே உனக்குள் இருக்கும் கடவுளை ''நான்'' என்று நீ உணரலாம், மறவாதே.

88. ஏ மனமே! உனது அந்தராத்மாவின் குரல் கடவுளுடைய குரலாகும் நம்பு, மறவாதே.

89. ஏ மனமே! பணத்தைக் கொண்டுகடவுளைக் கண்டு பிடித்துவிட முடியாது, ஜாக்ரதை, மறவாதே.

90. ஏ மனமே! மிகக் கொடிய பாவியுமே தனக்குள் சென்று "நான் யார்" எனக் கேட்டு உணர்வதால் ஞானியாகி விடமுடியும், மறவாதே.

91. ஏ மனமே! எண்ணங்களின் உற்பத்தி ஸ்தானத்தின் கதவை அடைத்துவிடுவையானால் "நான்" நானாகவே இருக்கிறேன் என்பதை நீ உணர்வாய், மறவாதே.

92. ஏ மனமே! கடவுளின் உறைவிடம் ஆன்மாவாகும். அந்தக் கடவுள் உனது இதயத்துள்ளே ஆன்மாவாகவே இருக்கிறார், மறவாதே.

93. ஏ மனமே! கடவுளை முழு மனத்துடன் நம்பிவிட்டவனுக்கு லட்சியம் என்று ஒன்றுமேயிராது, மறவாதே.

94. ஏ மனமே! ஆன்மாவாகிய இதயத்தில் சாஸ்வதமாக அழிவற்று இருக்கும் கடவுளை, பணப்பெட்டியில் தேடி வருகிறவன் முட்டாள், மறவாதே.

95. ஏ மனமே! கடவுளை அன்பிற்குள் பார், மறவாதே.

96. ஏ மனமே! ஸங்கல்பம் செய்வதினால் உலகப்பற்றும் ஸங்கல்பத்தை தியாகம் செய்து விடுவதினால் பிரம்மானுபவமும் உனக்கு உண்டாகும், மறவாதே.

97. ஏ மனமே! பிறர்க்கு சொப்பனத்திலும் தீங்கு செய்யாதே, சொன்ன சொல்லையும் தவறாதே, ஜாக்ரதை, மறவாதே.

98. ஏ மனமே! தேவைகள் அற்றுவிடுமானுல் வாழ்நாள் முழுவதும் குறையற்ற இன்பத்தை அனுபவிக்கலாம், மறவாதே.

99. ஏ மனமே! கடவுள் உனக்குள் இருக்கிருன். அவனே நீ ஏமாற்றி தப்பிவிட முடியாது, ஜாக்ரதை மறவாதே.

100. ஏ மனமே! உண்மையான பக்தி ஒன்றே உன்னைப் பரிசுத்தமாக்கும், மறவாதே.

101. ஏ மனமே! உண்மையான தியாகம் ஒன்றினுல் மட்டுமே மனிதன் பிரம்ம மயமாகிவிடமுடியும்.

102. ஏ மனமே! தன்னையே கடவுளுக்கு அர்ப்பணம் செய்தவுடன், நீயும் கடவுளும் ஒன்ருகிவிடுகிற ரகசியத்தை நம்பு, மறவாதே.

103. ஏ மனமே! உண்மையான பக்தனுக்கு உலகில் ஒன்றுமே தேவையிராது, மறவாதே.

104. ஏ மனமே! நீ கடவுளைப் பார்க்காவிடினும், கடவுள் உன்னை சதாகாலமும் பார்த்துக் கொண்டிருக்கும் பார்வையில் இருந்து நீ தப்பிவிடமுடியாது, மறவாதே, ஜாக்ரதை.

105. ஏ மனமே! உயிர்கள் அனைத்திலும் கடவுளை பார்ப்பவனிடம் பொருமையோ அல்லது பகைமையோ அணுவளவும் இருது, மறவாதே.

106. ஏ மனமே! பற்றற்றவனே முழு மனதுடன் பக்தி செய்து வாழமுடியும், மறவாதே.

107. ஏ மனமே! நீ உண்மையான பக்தன்தானு அல்லது பக்தன் போல நடிக்கிருயா என்பதை உனக்குள் இருக்கும் கடவுள் நன்கறிவன், மறவாதே.

108. ஏ மனமே! பசுமாடு பலநிறங்களில் காணப்பட்டாலும் எல்லா மாட்டின் பாலும் ஒரே வெண்மையாகவே இருப்பதை போல், உலக மக்கள் அனைவருடைய உடலில் வேறுபாடுகள் இருப்பினும் உலக மக்கள் அனைவரும் ஒரே அறிவுடையவர்களாக, அன்புடையவர்களாகவே இருந்து வருவதை நீ நம்பு, மறந்துவிடாதே.

109. ஏ மனமே! கடவுள் அமைதிக்குள் இருந்துவருவதால்அமைதியுடன் இரு, மறந்துவிடாதே.

110. ஏ மனமே! உண்மையான பக்தன் மக்களைக் கடவுளாகவே நம்பிவிடுவன், மறவாதே.

111. ஏ மனமே! பலன்களை விரும்பினுல் அது மட்டுமே கிட்டும். பலனை எதிர் பாராதவனுக்கு கடவுளே கிட்டிவிடும், மறவாதே.

112. ஏ மனமே! பொருள் செல்வமுள்ளவன் திருடனுக்குப் பயப்படவேண்டும், அருள் செல்வமுடையவனே தேவாதி தேவனுக்கும் பயப்படவேண்டாம், மறவாதே.

113. ஏ மனமே! பாலில் மறைந்திருக்கும் நெய் போல் உலக மக்கள் அனைவரிடமும்

ஆன்மா இருந்து வருவதை மறந்துவிடாதே.

114. ஏ மனமே! கடவுள் உமது இதயத்தில் இருக்கிறார். நீயோ உனது இருதயத்தை மறந்துவிட்டாய், ஜாக்ரதை.

115. ஏ மனமே! நிராசையுடையவனிடமே குறைவற்ற இன்பம் இருந்து வரும், மறவாதே.

116. ஏ மனமே! சிரத்தாபக்தியும், நம்பிக்கையுமே உன்னை மாமனிதன் ஆக்கிவிடும், மறவாதே.

117. ஏ மனமே! தேவையற்றவனின் முன்பு தெய்வம் ஏவல் செய்யக்காத்திருக்கும், மறவாதே.

118. ஏ மனமே! நீ கற்றதெல்லாம் அறிவாகிவிடாது என்பதை மறவாதே.

119. ஏ மனமே! பற்றுள்ளவன் பாவம் செய்வான், நீ பற்றற்றிருந்துவா, மறவாதே.

120. ஏ மனமே! அன்பில்லாதவனிடம் பக்தியிராது, மறவாதே.

121. ஏ மனமே! வண்ணான் துணியைத் தூய்மையாக்கி விடுவதைப் போல உனதுமன அழுக்காகிய அக்ஞானத்தை இறைவனின் திருநாமம் ஒன்றே தூய்மையாக்கும், மறவாதே.

122. ஏ மனமே! அறநெறி நிற்பதே எனது கடமையாகும் என்று உறுதி எடுத்துக் கொண்டுவிடு, மறவாதே.

123. ஏ மனமே! சூர்யன் உதயமானாலும்

குருடனுக்குப் பிரயோஜனப் படாததைப் போல கடவுள் எங்கும் நிறைந்திருப்பினும் அக்ஞானிக்குப் பிரயோஜனப் படாதென்பதை மறவாதே.

124. ஏ மனமே! ஒழுக்கமுள்ளவனை நண்பனுக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

125. ஏ மனமே! உண்மையான பக்தி புகழுக்கு ஆசைப்படாது, மறவாதே.

126. ஏ மனமே! நிராசை ஒன்றே அறியாமையைப் போக்கும், மறவாதே.

127. ஏ மனமே! தாய் ஒருவளே உண்மையான அன்பை உன்னிடம் செலுத்துவள், மறவாதே.

128. ஏ மனமே! வேஷம் போடாதே, ஜாக்ரதை.

129. ஏ மனமே! மேன் மக்களுடைய சங்கம் ஒன்றே நல்லறிவை வளரச் செய்யும், மறவாதே.

130. ஏ மனமே! உண்மையான பக்தனிடம் ஆடம்பரம் இராது, மறவாதே.

131. ஏ மனமே! பிறரை மதிப்பிடுவது உனது வேலையில்லை, மறவாதே.

132. ஏ மனமே! முற்றிலும் பற்றற்றவன் பரம்பொறுளாகி விடுகிருன் மறவாதே.

133. ஏ மனமே! கடவுள் உனக்குள் இருந்து கொண்டு உபதேசிப்பது, உலகை நம்பாதே, உன்னை நீ நம்பு என்பதாகும், மறவாதே

134. ஏ மனமே! தன்னை "நான் யார்" எனக் கேட்டு உணர்ந்தவுடன் மெய்ஞ் ஞானியின்

லெட்சணமெல்லாம் தானே உனக்குள் வந்து விடும், மறவாதே.

135. ஏ மனமே! தனக்குள் தன்னைத் தெரிந்து கொண்டவன் தற்கொலை செய்து கொள்ள மாட்டான், மறவாதே.

136. ஏ மனமே! புறக் கண்களால் உனது ஆன்மாவை நீ பார்க்க முடியாது, மறவாதே.

137. ஏ மனமே! உனது உலகம், நிலையற்றதென்பதை மறந்துவிடாதே.

138. ஏ மனமே! நிராசை என்னும் வாள் கொண்டு அறியாமையை வெட்டி எறிந்து விடுவாயாகுக, மறவாதே.

139. ஏ மனமே! "நான் யார்" எனக் கேட்டு உண்மையை உணர்வாயானால் நீயும் இம்மையில் ஜீவன் முக்தனாகி விடுவாய், மறவாதே.

140. ஏ மனமே! ஞானம் என்பதெல்லாம் தன்னைத் தெரிந்து கொள்வதொன்றேயாகும், மறவாதே.

141. ஏ மனமே! பிறரை சதாகாலமும் நினைத்திருப்பவன் துக்கப்படுவன், மறவாதே.

142. ஏ மனமே! உனது கண்களை நீ பார்க்க முடியாதது போல் உனது ஆன்மாவைப் பார்க்க முடியாது. உணரத்தான்முடியும்.

143. ஏ மனமே! உலகில் ஆகாசம் மறைவதில்லை உனது ஆன்மாவும் மறைவதில்லை, மறவாதே.

144. ஏ மனமே! உனது சித்த விருத்தியை கல்மலே போல் அசைவின்றிச் செய்துவிடுவது தான் யோகமாகும், மறவாதே.

145. ஏ மனமே! நீ உலகமும் அல்ல, உடலுமல்ல என்பதை மறவாதே.

146. ஏ மனமே! சந்தேகம் உள்ளவனிடம் மன அமைதியிராது, மறவாதே.

147. ஏ மனமே! உனக்குள் அழிவற்ற பிரம்ம சக்தி ''நான்'' என்று இருக்கிறதை ''நான் யார்'' என நீ உனக்குள் கேட்டு உணர்ந்து கொள் மறவாதே.

148. ஏ மனமே! தோற்ற மனைத்தையும் அறவே! [illegible] [illegible] பின் பிஞ்சுவதே [illegible] மறவாதே.

149. ஏ மனமே! நம்பிக்கை [illegible] ஆற்றலும் அன்பும், பண்பும் இராது, மறவாதே.

150. ஏ மனமே! மோகம் இருக்கும் வரை நீ மோசம் போய்க் கொண்டிருப்பாய் ஜாக்ரதை, மறவாதே.

151. ஏ மனமே! நீயும் இம்மையில் ஞானியாகி விடவேண்டுமென்றால் ''நான் யார்'' என உனக்குள் ஊடுருவிச் சென்று, விடாது கேள், மறவாதே.

152. ஏ மனமே! தத்துவத்தை உபதேசிப்பது சுலபம், தத்துவ ஞானியாவது தான் கஷ்டம், மறவாதே.

லெட்சணமெல்லாம் தானே உனக்குள் வந்து விடும், மறவாதே.

135. ஏ மனமே! தனக்குள் தன்னைத் தெரிந்து கொண்டவன் தற்கொலை செய்து கொள்ள மாட்டான், மறவாதே.

136. ஏ மனமே! புறக் கண்களால் உனது ஆன்மாவை நீ பார்க்க முடியாது, மறவாதே.

137. ஏ மனமே! உனது உலகம், நிலையற்றதென்பதை மறந்துவிடாதே.

138. ஏ மனமே! நிராசை என்னும் வாள் கொண்டு அறியாமையை வெட்டி எறிந்து விடுவாயாகுக, மறவாதே.

139. ஏ மனமே! ''நான் யார்'' எனக் கேட்டு உண்மையை உணர்வாயானால் நீயும் இம்மையில் ஜீவன் முக்தனாகி விடுவாய், மறவாதே.

140. ஏ மனமே! ஞானம் என்பதெல்லாம் தன்னைத் தெரிந்து கொள்வதொன்றேயாகும், மறவாதே.

141. ஏ மனமே! பிறரை சதாகாலமும் நினைத்திருப்பவன் துக்கப்படுவன், மறவாதே.

142. ஏ மனமே! உனது கண்களை நீ பார்க்க முடியாதது போல் உனது ஆன்மாவைப் பார்க்க முடியாது. உணரத்தான்முடியும்.

143. ஏ மனமே! உலகில் ஆகாசம் மறைவதில்லை உனது ஆன்மாவும் மறைவதில்லை, மறவாதே.

144. ஏ மனமே! உனது சித்த விருத்தியை கல்மலை போல் அசைவின்றிச் செய்துவிடுவது தான் யோகமாகும், மறவாதே.

145. ஏ மனமே! நீ உலகமும் அல்ல, உடலுமல்ல என்பதை மறவாதே.

146. ஏ மனமே! சந்தேகம் உள்ளவனிடம் மன அமைதியிராது, மறவாதே.

147. ஏ மனமே! உனக்குள் அழிவற்ற பிரம்ம சக்தி ''நான்'' என்று இருக்கிறதை ''நான் யார்'' என நீ உனக்குள் கேட்டு உணர்ந்து கொள் மறவாதே.

148. ஏ மனமே! தோற்ற மனைத்தையும் அறவே முற்றிலும் தள்ளிய பின் மிஞ்சுவதே உனதான்மா, மறவாதே.

149. ஏ மனமே! நம்பிக்கை அற்றவனிடம் ஆற்றலும் அன்பும், பண்பும் இராது, மறவாதே.

150. ஏ மனமே! மோகம் இருக்கும் வரை நீ மோசம் போய்க் கொண்டிருப்பாய் ஜாக்ரதை, மறவாதே.

151. ஏ மனமே! நீயும் இம்மையில் ஞானியாகி விடவேண்டுமென்றால் ''நான் யார்'' என உனக்குள் ஊடுருவிச் சென்று, விடாது கேள், மறவாதே.

152. ஏ மனமே! தத்துவத்தை உபதேசிப்பது சுலபம், தத்துவ ஞானியாவது தான் கஷ்டம், மறவாதே.

153. ஏ மனமே! உன்தான்மாவிற்குப் பெயர் ஓம் என்பதாகும் ஓங்காரத்தைத் தியானம் செய்து நீ ஓம்காரமாகவே இருப்பதை உணர்ந்து கொள், மறவாதே.

154. ஏ மனமே! ''நான் யார்'' எனக் கேட்பாயானுல் ''நான்'', ''நான்'' என்று ஞான சூர்யன் உதயமாகிவிடும், மறவாதே.

155. ஏ மனமே! ஆன்மாவை வாங்கவும், விற்கவும், முடியாது மறவாதே.

156. ஏ மனமே! ஞானமே உனது நிஜமான கண்ணுகும், மறவாதே.

157. ஏ மனமே! முதலில் இறைவனை சத்யமாக நம்பு. பிறகு உன்னையே இறைவனின் திருவடிகளில் சமர்ப்பித்து விடுவதே மிகச்சிறந்த பக்தியாகும் என்பதை மறவாதே.

158. ஏ மனமே! சிந்தனை பற்றை உண்டாக்கும். பற்றிலிருந்து ஆசை பிறக்கும் ஆசை பேராசையாகி அல்லலுற்று அழிந்து போவாய், ஜாக்ரதை, மறவாதே.

159. ஏ மனமே! இரண்டற்றது உனது ஆன்மா. அதன் பெயர் ஓம் என்பதாகும், மறவாதே.

160. ஏ மனமே! உலகில் உண்மையானது ஒன்றே ஒன்றுதான் உளது, அது உனதான்மா என்பதை நீ மறவாதே.

161. ஏ மனமே! அணுவளவு ஆசையிருப்பினும் உனது ஆன்மாவை நீ மறந்து விடுவாய்

ஜாக்ரதை.

162. ஏ மனமே! திருப்தியற்றவனை துக்கம் பற்றிக் கொண்டுவிடும், மறவாதே.

163. ஏ மனமே! உண்மையான சரணாகதி மனிதனைக் கடவுளாக்கிவிடும், மறவாதே.

164. ஏ மனமே! பேராசையுடையவன் பலாத்காரத்தால் தனது கார்யத்தை சாதித்துக் கொள்வான். நீ ஜாக்ரதையோடு அவனிடம் இருந்து கொள், மறவாதே.

165. ஏ மனமே! தயிரை மத்தால் கடைந்தால் வெண்ணைவரும். அதைப் போல் உன்னை ''நான் யார்'' என்கிற கேள்வியினால் உனக்குள் சென்று கடைவாயானால் தயிரில் வெண்ணை வெளி வந்ததைப் போல் நானே ப்ரம்மம் என்று நீ ஸ்வயம் பிரகாசத்துடன் வெளிப் படுவதை உணர்வாய், மறவாதே.

166. ஏ மனமே! பொறுமையுடன் சங்கல்பமின்றி இருப்பதுவே தவமாகும், மறவாதே.

167. ஏ மனமே! அழிவற்ற ஆனந்தம் ஆன்மாவிடம் இருக்கிறது வெளியில் இல்லை, மறந்துவிடாதே.

168. ஏ மனமே! செய்யக் கூடாததை சொப்பனத்திலும் செய்துவிடாதே. செய்ய வேண்டியதை செய்துவிடு, மறவாதே.

169 ஏ மனமே! தீ வினைகளை ஒழிக்க நல்வினைகளைச் செய்துதான் ஆகவேண்டும், மறவாதே.

170. ஏ மனமே! நியாயம் இல்லாதவனுக்கு

கோபம் வரும், மறவாதே.

171. ஏ மனமே! வண்டியில் பூட்டப்பட்ட குதிரையைப் போன்று உனது உடம்பில் பிராணன் பூட்டப் பட்டுள்ளதென்பதை நீ மறவாதே.

172. ஏ மனமே! உனது கண்களால் பார்ப்பது உனது உடல், மற்றுமுள்ள தோற்றம் அனைத்துமே உனதான்மா வல்ல என்பதை மறவாதே.

173. ஏ மனமே! உண்மையாக இல்லாததை இருப்பதைப் போல் காட்டுவதே மாயை மறவாதே.

174. ஏ மனமே! ஆசையுள்ள வரை வேதனையும் கூடவே இருக்கும் மறவாதே.

175. ஏ மனமே! பற்றுள்ளவரை உன்னை அக்ஞானிகள் விரட்டி சித்ரவதை செய்வார்கள். பற்றற்றவுடன் தெய்வங்கள் உன்னைத் தேடி வந்து போற்றிப் புகழ்ந்து ஏவல் செய்வார்கள் மறவாதே.

176. ஏ மனமே! உன்னிடம் அறியாமை இருப்பதற்கு அடையாளம் பிறருக்குத் தீமை நினைப்பதாகும், மறவாதே.

177. ஏ மனமே! உனதான்மாவிற்கு அழிவில்லை. உடலுக்கு அழிவுண்டு, மறவாதே.

178. ஏ மனமே! நெருப்பிலிட்ட தங்கம் அழுக்கு நீங்கி பிரகாசிப்பதைப் போல் ''நான் யார்'' எனக் கேட்பவனின் அழுக்காகிய அக்ஞானம் நீங்கி விடுவதால் அவன் ஸ்வயம் பிரகாசத்துடன் பிரகாசிப்பான்

என்பதை மறவாதே.

179. ஏ மனமே! வேற்றுமையை உண்டு பண்ணுவது மாயையாகும், மறவாதே.

180. ஏ மனமே! உன்னிடமுள்ள ஆசையே உனக்குள்ளிருக்கும் எமனுவன், மறவாதே.

181. ஏ மனமே! தியாக வாழ்வை மேற்கொண்டவனை முப்பத்து முக்கோடி தெய்வங்களும் போற்றும் மறவாதே.

182. ஏ மனமே! நீ உயிருடன் இருக்கும் போதே செத்தவனைப் போல் இருந்து கொண்டு செய்வனதிருந்தச் செய்து கொண்டிரு, மறவாதே.

183. ஏ மனமே! உலகில் இருந்து வரும் நூலினுல் உண்டாக்கப்பட்ட ஆடைகள் அனைத்துமே பஞ்சில் இருந்து வெளி வந்தவை போல் பிரபஞ்சத்தில் இருந்து வரும் அனைத்துமே உனதான்மாவையன்றி வேறில்லை மறவாதே.

184. ஏ மனமே! சூர்யனை மேகம் மறைப்பது போல உனதான்மாவை ஆசை மறைத்துக் கொண்டிருக்கிறதை மறவாதே.

185. ஏ மனமே! ஆசையுள்ளவரை உனது கூடவே மாயையும் இருந்துவரும், மறவாதே.

186. ஏ மனமே! உனது மறுபிறவி மிருகமாகி விடாதபடி பார்த்துக் கொள் ஜாக்ரதை, மறவாதே.

187. ஏ மனமே! கரியை நெருப்பில் போட்டவுடன் கரியின் கருப்பு நிறம் மாறி

கரித்துண்டு நெருப்பாகி விடுவதைப் போல் நீயும் ஞானிகளுடன் சேர்ந்து ஞானுக்னியின் மயமாகி விடுவாய். மறவாதே.

188. ஏ மனமே! ஞானமுள்ளவனிடம் தனக்கென்று ஒன்றும் இராது, மறவாதே.

189. ஏ மனமே! களங்கமற்ற புத்தியை உடையவன் "நான் யார்" என தனக்குள் கேட்டவுடன் தான் ப்ரம்மமாக இருப்பதை உணர்வான், மறவாதே.

190. ஏ மனமே! உலகில் விரும்புவதற்கு என்ன இருக்க முடியும் சொல்?

191. ஏ மனமே! உன்னே அடியோடு கெடுப்பது ஆசையாகும் ஜாக்ரதை மறவாதே.

192. ஏ மனமே! ஊனக்கண்ணுல் உலகை அறியலாம். ஞானக் கண்ணிஞல் மட்டுமே உன்னே நீ பார்க்க முடியுமென்பதை மறவாதே.

193. ஏ மனமே! எதையும் எதிர்பாராதிருப்பதுவே ஞானமிருப்பதற்கு அடையாளமாகும், மறவாதே.

194. ஏ மனமே! உலகில் தன்னே (ஆத்மாவை) விட உண்மையானது ஒன்றும் இல்லே என்று நம்புகிறவனே ஜீவன் முக்தன், மறவாதே.

195. ஏ மனமே! உனக்குதீமை செய்தவனிடமும் அன்பு செலுத்துவதே உனது கடமையாகும், மறவாதே.

196. ஏ மனமே! உனக்குள் ஒரே உபதேசம்

உன்னை நீ அறிவதாகும், மறவாதே.

197. ஏ மனமே! தனதான்மாவைவிட வேறென்று இருப்பதாக நம்புகிறவன் முட்டாள் என்பதை மறவாதே.

198. ஏ மனமே! ஆசையுள்ளவன் எவனோ அவனே பொய் பேசுவான், மறவாதே.

199. ஏ மனமே! ஆசையை முற்றிலும் விட்டு விடுவதே இந்துமத வேதாந்தங்களின் சாரமாகும், மறவாதே.

200. ஏ மனமே! நீ அனுபவிக்கும் துயரத்திற்குக் காரணம் உனக்குள் இருக்கும் ஆசையாகும், மறவாதே.

201. ஏ மனமே! முதலில் உன்னைத் திருத்திக் கொள். உலகம் தானே திருந்தி விடும், மறவாதே.

202. ஏ மனமே! சந்தேகமுள்ளவனுக்காகவே நரகம் சிருஷ்டிக்கப்பட்டுள்ளதை மறவாதே.

203. ஏ மனமே! தோஷமுள்ளவன் பிறரிடம் கெட்ட குணதோஷங்களைக் கண்டு பிடிப்பான், மறவாதே.

204. ஏ மனமே! வேதாந்தத்தின் உண்மையான சாரம் நிராசையுடன் இருப்பதேயாகும், மறவாதே.

205. ஏ மனமே! ஆசையுள்ளவனிடம் பொறுமையும் நற்குணமும் இராது, மறவாதே.

206. ஏ மனமே! ஆசையுள்ளவனிடம் உனக்கு

விடுதலை கிடையாது என்பதை, மறவாதே.

207. ஏ மனமே! கடவுள் மனித உயிருடன் உலகில் நடமாடிக் கொண்டிருப்பதை நம்பு, மறவாதே.

208. ஏ மனமே! முதலில் தன்னைத் தெரிந்து கொள்வதே அறமாகும், மறவாதே.

209. ஏ மனமே! முற்றிலும் பற்றற்றவன் எங்கும் தடையின்றிச் செல்வான், மறவாதே.

210. ஏ மனமே! இந்து மதத்தின் முடிவான ஸாரம் உனது ஆத்மாவே உண்மை, மற்றவைகள் அழிந்து போகுமென்பதாகும், மறவாதே.

211. ஏ மனமே! அன்பில்லாதவன் கருணைகாட்ட முடியாது, மறவாதே.

212. ஏ மனமே! ஆசையானது உன்னை பளுவாக்கிக் கொண்டுபோய் நரகில் ஆழ்த்திவிடும், ஜாக்ரதை.

213. ஏ மனமே! பற்றுள்ளவனிடம் நிச்சயபுத்தி இராதென்பதை மறவாதே.

214. ஏ மனமே! ஞானுனுபவம் உண்டாகும்போது நீ முற்றிலும் தூய்மையானவனுகி விடுவாய் மறவாதே.

215. ஏ மனமே! சத்யத்தைத் தெரிந்து கொள்ளாதவன் பிறரை தூசிப்பான், மறவாதே.

216. ஏ மனமே! உனக்குள் நமாரூபங்கள் ஒன்றும் பதிவாகி விடக்கூடாது ஜாக்ரதை, மறவாதே.

217. ஏ மனமே! அக்ஞானி உண்மை பேசுவது மிகக் கடினமாகுமென்பதை மறவாதே.

218. ஏ மனமே! உனது நடத்தை கெடுமானல் மக்கள் அனைவரும் வெறுத்து ஒதுக்கி விடுவார்கள் ஜாக்ரதை.

219. ஏ மனமே! ஞானமுள்ளவன் பிறரை இம்சிக்கமாட்டான், மறவாதே.

220. ஏ மனமே! ஞானமுள்ளவன் அமைதியாக இருப்பான், மறவாதே.

221. ஏ மனமே! ஆசையுள்ளவனின் மனம் எப்பொழுதும் விகாரமுள்ளதாகவே இருக்கும் என்பதை மறவாதே.

222. ஏ மனமே! பந்தமும் மோகமும் உனதுமனத்திடமே உளது, மறவாதே.

223. ஏ மனமே! ஆசையை நிறைவேற்றிக் கொள்ளமுடியாதவன் கோபப்பட்டு சண்டை போடுவான், மறவாதே.

224. ஏ மனமே! மனிதனை உயர்த்தும் உயர்ந்த நீதி தன்னை ''நான் யார்'' எனக் கேட்டு உணர்வதொன்றேயாகும், மறவாதே.

225. ஏ மனமே! முதலில் உன்னைப் புனிதனுக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

226. ஏ மனமே! உலகில் கடவுள் ஒருவரே இருக்கிறார். வெறுப்பதற்கு என்று ஒன்றுமில்லை, மறவாதே.

227. ஏ மனமே! புண்யம் செய்துள்ளவனில் மனம் நிராசையுடையதாக இருக்கும், மறவாதே.

228. ஏ மனமே! சொர்க்கமும் நரகமும் உனது நினைவின் படிதான் இருந்துவரும், மறவாதே.

229. ஏ மனமே! நம்பிக்கை யற்றவன் வேரில்லாத மரத்தைப் போன்றவன், மறவாதே.

230. ஏ மனமே! பிறரைநீ இவன் பாவியென்று நினைப்பதுவே நீ செய்யும் முதல் பாவம் ஆகும். மறவாதே.

231. ஏ மனமே! இரும்பை துரு தின்று விடுவதைப் போல உனது கெட்ட எண்ணம் உன்னை கொன்று தின்றுவிடும், மறவாதே.

232. ஏ மனமே! அடக்கத்துடன் பொறுமையாகப் பணிசெய்து வா, மறவாதே.

233. ஏ மனமே! புஷ்பத்தையோ, புஷ்பத்தின் மணத்தையோ கெடுத்து விடாமல் தேனை மாத்திரம் பருகுகிற தேனியைப் போல் நீயும் நல்ல தொன்றையே கிரகித்துக் கொள், மறவாதே.

234. ஏ மனமே! பகைப்பவனுடன் நீயும் பகைத்துக் கொள்வதால் பகை போய்விடாது, மறவாதே.

235. ஏ மனமே! ஒழுக்கமுள்ளவனையே சான்றோர்கள் ''மனிதன்'' என்பார்கள், மறவாதே.

236. ஏ மனமே! உலகில் இருந்து வரும் ஒரே இறைவன் எல்லோருடைய ஆன்மாவாகவும் இருந்து வருவதை மறவாதே.

237. ஏ மனமே! கடவுள் நம்பிக்கை ஒன்றே உன்னை நல்லவனுக்கி விடும், மறவாதே.

238. ஏ மனமே! ஒழுக்கமற்றவன் இரண்டு கால் மனித மிருகமாவான், மறவாதே.

239. ஏ மனமே! உலகம் கடவுள் சொத்தாகும். கண்களுக்கு முன்பு கடவுள் இல்லையென்று நினைத்துக் கொண்டு உலகில் உள்ள எதையும் எடுத்துக் கொண்டுவிடாதே, மறவாதே.

240. ஏ மனமே! அன்பு ஒன்றே அனைத்தையும் வெல்லும், மறவாதே.

241. ஏ மனமே! கடவுளை உண்மையாக நம்புகிறவன் மதம் மாற மாட்டான், மறவாதே.

242. ஏ மனமே! ஞானமுள்ளவனே சத்தியத்தைப் பேசுவான், மறவாதே.

243. ஏ மனமே! நீ கர்வப் படுவதற்கு, உன்னிடம் என்ன நல்ல குணம் இருக்கிறது, ஜாக்ரதை, மறவாதே.

244. ஏ மனமே! தனது சுகத்திற்காக பிறரை வேலை வாங்குகிறவன் பாவியாவான், ஜாக்ரதை.

245. ஏ மனமே! மீன் சதா காலமும் நீரை விரும்புவதைப் போல் நீ கடவுளை முழு மனத்துடன் இடைவிடாமல் விரும்பு, மறவாதே.

246. ஏ மனமே! குறையில்லாத மனிதனை உலகில் காண முடியாது, மறவாதே.

247. ஏ மனமே! பேராசையுடையவனிடம் உருப்படாத கருத்துக்கள் இருந்து வரும், மறவாதே.

248. ஏ மனமே! முதலில் கடவுளைச் சரணமடைந்து விடுவதே உனது கடமை, மறவாதே.

249. ஏ மனமே! உறுதியற்றவனிடம் உள்ளத் தூய்மை இராது, மறவாதே.

250. ஏ மனமே! நீ அறநெறியில் ஈடுபட்டிருப்பது பிறருக்குத் தெரியவேண்டாம், மறவாதே.

251. ஏ மனமே! உண்மையான பக்தனின் உள்ளத்தில் கடவுள் இருப்பதை நம்பு, மறவாதே.

252. ஏ மனமே! அடக்கமானது முதலில் உனது மனத்தினிடம் இருக்கவேண்டும், மறவாதே.

253. ஏ மனமே! ஆசையுள்ளவன் அடிமையாகிவிடுகிறான், ஜாக்ரதை, மறவாதே.

254. ஏ மனமே! சொல் தவறுகிறவன் தவறிழைப்பான். அவன் நேர்மையாகவும் இருந்து வரமாட்டான், மறவாதே.

255. ஏ மனமே! மனிதனின் முதல் சத்ரு சந்தேகமாகும், மறவாதே.

256. ஏ மனமே! அநியாயத்திற்கு அஞ்சாதே, தைரியமாக தர்மத்தைத் துணிந்து செய், மறவாதே.

257. ஏ மனமே! இறைவன் மனித உருவத்தில்

உலகில் உலவுவதால் எல்லோரையுமே கடவுளாக நம்பிவிடு. ஜாக்ரதை, மறவாதே.

258. ஏ மனமே! அடங்கியிருக்கும் ஆசை நசித்துப் போய்விட வேண்டும், மறவாதே.

259. ஏ மனமே! மதத்தில் பிடிவாதமுடையவனுக்கும் பரம்பொருளுக்கும் வெகு தூரமாகும், மறவாதே.

260. ஏ மனமே! பேராசையுள்ளவன் பிறரை சதாகாலமும் துயரப் படுத்திக் கொண்டேஇருப்பான் மறவாதே.

261. ஏ மனமே! சன்மார்க்கம் என்பது உன்னையே முதலில் நீ தெரிந்து கொள்வதாகும், மறவாதே.

262. ஏ மனமே! மெய்யணுகிவிடு, பொய்யணுகி விடாதே, ஜாக்ரதை.

263. ஏ மனமே! கடவுளை முழு மனத்துடன் நம்புவதே உலகில் பெரிய அதிசயமாகும்.

264. ஏ மனமே! ஆசையுள்ளவன் மனம் அரை நிமிஷமும் சும்மாயிராது, மறவாதே.

265. ஏ மனமே! மதங்கள் ஒரு கோடி இருப்பினும் கடவுள் ஒருவர் தான் உண்மையாக இருக்கமுடியும் மறவாதே.

266. ஏ மனமே! அமைதி வேண்டுமென்றால் மனத்துள் உள்ள அனைத்தையும் துறந்து விடு, மறவாதே.

267. ஏ மனமே! சக்கரையானது நீரில் கரைந்து ஒன்றாகி விடுவதைப் போல் கடவுளுடன்

உன்னைக் கரைத்துக் கொண்டுவிடு, மறவாதே.

268. ஏ மனமே! ஆசை நிறைவேறாது தோற்றவனே நாஸ்திகனாகி விடுகிறான், மறவாதே.

269. ஏ மனமே! கடவுள் பற்றற்றவனை தேடிக் கொண்டிருக்கிறார், மறவாதே.

270. ஏ மனமே! சம்பிரதாயங்களே வழிபாடாகி விடாது, ஜாக்ரதை மறவாதே.

271. ஏ மனமே! உண்மையான, அழிவற்ற கடவுளுக்குக் குணங்கள் இல்லை, மறவாதே.

272. ஏ மனமே! தத்துவப் பொருளாகிய அழிவற்ற சிவனே உனதான்மாவாகும், மறவாதே.

273. ஏ மனமே! உலகில் கடவுளின் அற்புத சிருஷ்டி மனிதனாகும், மறவாதே.

274. ஏ மனமே! பேராசையுடையவனே துணிந்து பாவத்தைச் செய்வான், மறவாதே.

275. ஏ மனமே! விவேகமிருப்பவன் விடாமுயற்சியோடு மனஉறுதியுடன் கடமைகளைச் செய்வான், மறவாதே.

276. ஏ மனமே! முதலில் தன்னைத் திருத்திக் கொள்வதே முதலில் உனது கடமை, மறவாதே.

277. ஏ மனமே! உனக்கு அளவிட முடியாத மனவலிமையைத் தருவது கடவுள் நம்பிக்கையாகும் நம்பு, மறவாதே.

278. ஏ மனமே! கடலுக்குள் விலைமதிப்பற்ற இரத்தினங்கள் இருப்பதைப் போல், உனக்குள் விலை மதிப்பற்ற கடவுள் சத்யமாகவே இருந்து வருகிறார், மறவாதே.

279. ஏ மனமே! உண்மை ஒன்றையே பேசுகிறவன் மரணத்திற்கும் அஞ்சான், மறவாதே.

280. ஏ மனமே! கெட்ட குணமுடையவன் பிறருடைய விஷயத்தைக் கேட்டு அதைப் பறைசாற்றுவன், மறவாதே.

281. ஏ மனமே! பிடிவாதமுள்ளவனிடம் ஆணவமும் இருக்கும், மறவாதே.

282. ஏ மனமே! புன்சிரிப்போடு உள்ளன்புடன் பழகுவாயானால் வெற்றி பெறுவாய், மறவாதே.

283. ஏ மனமே! உனக்குள் இருந்து வரும் கடவுளே உலகில் உள்ள உயிர்களுக்குள்ளேயும் இருந்து வருவதை மறந்துவிடாதே.

284. ஏ மனமே! நேசிக்கத் தெரியாதவன் துன்பப்பட்டு இறப்பன், மறவாதே.

285. ஏ மனமே! மேகங்கள் உப்பு நீரை உறிஞ்சி அதை இனிய நீராகத் தருவதைப் போல் நீயும் கேடுடைவர்களையெல்லாம் நண்பனாக்கிக் கொண்டு அவர்களையும் நல்லவர்களாக்கு வாயாகுக. மறவாதே.

286. ஏ மனமே! உன்னைத் திருத்திக் கொள்ளாவிடில் தன்னை ''நான் யார்'' எனக் கேட்டு உணரமுடியாது, மறவாதே.

287. ஏ மனமே! முடிந்தால் பிறர் துன்பத்தைப் போக்கிவிடு. முடியாவிட்டால் பிறருக்குத் துன்பத்தைத் தந்துவிடாதே, ஜாக்ரதை.

288. ஏ மனமே! கடவுளை தனது ஆன்மாவாகவே நம்பி விட்டவன் எவனோ, அவன் சென்றவிடமெல்லாம் சிறப்புண்டாகும், மறவாதே.

289. ஏ மனமே! பெருந்தன்மையுடையவனே பிறரைப் பெருமைப்படுத்துவதில் சந்தோஷமுள்ளவனாக இருப்பான், மறவாதே.

290. ஏ மனமே! ஆசையற்றவனிடம் பிரச்சனைகள் இராது, மறவாதே.

291. ஏ மனமே! பிறரிடம் நீ பழகாது, இவன் வஞ்சகன் என்று எவரையும் முடிவு கட்டிவிடாதே, ஜாக்ரதை.

292. ஏ மனமே! துன்பத்தைத் தாங்கிக் கொள்வதுதான் மிகப் பெரிய தவமாகும், மறவாதே.

293. ஏ மனமே! தாய் தந்தையரை தெய்வமாக நம்பி விட்டவனே சத்புத்ரனாவன், மறவாதே.

294. ஏ மனமே! பற்று அற்றவன் இருக்குமிடமே ஸ்வர்க்கம் என்பதை மறவாதே.

295. ஏ மனமே! மரங்கள் தனது கனிகளை பிறருக்கே தருவதைப் போல் நீயும் உன்னிடமுள்ளதை பிறருக்குக் கொடுத்து இன்புற்றுவா, மறவாதே.

296. ஏ மனமே! முதலில் நீ வஞ்சனையற்றவனாகி விடு, மறவாதே.

297. ஏ மனமே! எதுவரினும் பொறுத்துக் கொள்ளும் சக்தி உடையவனே பிறருக்கு உதவமுடியும், மறவாதே.

298. ஏ மனமே! சொப்பனத்திலும் பிறரை நீ மோசம் செய்துவிடாதே, ஜாக்ரதை.

299. ஏ மனமே! பொறுமையுடையவன் எவனோ, அவன் வானத்திலும் உயர்ந்தவனாவன், மறவாதே.

300. ஏ மனமே! நல்லறிவுடைய அறிஞன் தாமரையிலை மேல் உள்ள தண்ணீரைப்போல் இருந்துவருவான், மறவாதே.

301. ஏ மனமே! நல்லவர்களின் நட்பு உன்னை மேலும் நல்லவனாக்கி விடும்.

302. ஏ மனமே! உழைப்பவனுக்கே உயர்ந்த பதவியும், கீர்த்தியும் கிட்டும், மறவாதே.

303. ஏ மனமே! பேராசையோ, அல்லது பொறாமையோ இருப்பவனிடம் பெருந்தன்மை இராது, மறவாதே.

304. ஏ மனமே! உத்தமன் மற்றவர்களுக்கு நன்மை ஒன்றையே செய்வான், மறவாதே.

305. ஏ மனமே! தன்னையே "நான் யார்" எனக்கேட்டு உயர்ந்தவனைக் கண்டு தேவர்களும் பொறாமைப் படுகின்றனர், மறவாதே.

306. ஏ மனமே! நீ ஒழுங்காக இருந்தால் தான்

பிறர் சொன்னபடி கேட்பார்கள், மறவாதே.

307. ஏ மனமே! தென்னைமரம் பிறருக்காகவே தேங்காயை தந்து கொண்டிருப்பது போல் நீயும் நல்ல செய்திகளைத் தந்து கொண்டிரு, மறவாதே.

308. ஏ மனமே! அகங்காரமே உனது முதற் பகைவன் என்பதை மறவாதே.

309. ஏ மனமே! பசு மாட்டிற்கு அற்பமான புல்லை தருகிறவனுக்கே அந்தப்பசு பரிசுத்தமான பசும்பாலைத் தருவதைப் போல் நீயும் பிறருக்கு நல்ல தொன்றை கொடு, மறவாதே.

310. ஏ மனமே! பூமியைப் போல் நீயும் பொறுமையோடு இருந்துவா, மறவாதே.

311. ஏ மனமே! சன்மானத்தை எதிர் பார்ப்பவன் கவலைப்பட நேரும், ஜாக்ரதை, மறவாதே.

312. ஏ மனமே! ஆசையிருப்பவனிடம் கூடவே அச்சமும் இருக்கும், மறவாதே.

313. ஏ மனமே! ஆசையற்றவனிடம் பகைமை இராது; மறவாதே.

314. ஏ மனமே! சந்தன மரம், பிறரை குளிர்விப்பதைப் போல் நீயும் பிறரை சந்தோஷப்படுத்திவா, மறவாதே.

315. ஏ மனமே! இச்சையுள்ளவன் அனைவரிடமும் பிச்சையெடுத்தாக வேண்டுமென்பதை மறவாதே.

316. ஏ மனமே! சிறந்த அறிவுடையவன் போட்டியிடமாட்டான், மறவாதே.

317. ஏ மனமே! உலகில் இருப்பது ஒரே ஆன்மாவாகும். அதைப் புகழ்ந்து பெருமைப் படுத்துகிறவன் யாராயிருக்கு முடியும் சொல், மறவாதே.

318. ஏ மனமே! அகத்தூய்மையுள்ளவனிடம் பொறுமையிருது, மறவாதே.

319. ஏ மனமே! பிறருக்குச் சொல்வதை முதலில் நீ செய்து காட்டிவிடு, மறவாதே.

320. ஏ மனமே! மௌனமாக இருந்துகொண்டு ''நான் யார்'' என உனக்குள்கேள் மறவாதே.

321. ஏ மனமே! தற்புகழ்ச்சியானது உனது பெருமையை குறைத்துவிடும், ஜாக்ரதை.

322. ஏ மனமே! உலகில் கடவுள் இல்லாத இடமே இல்லை அவரை உண்மையாக போற்றி புகழ வேண்டுமென்ருல், மனத்தை மௌனமாக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

323. ஏ மனமே! பேராசையுடையவனிடம் கெட்ட எண்ணமே மேலிட்டிருக்கும், மறவாதே.

324. ஏ மனமே! பதவியற்றவனிடம் உள்ள பொறுமை பெருமையைத் தராது, மறவாதே.

325. ஏ மனமே! ஆணவத்தை பிடிவாதமாக வைத்துக் கொண்டிருப்பவன் மனம் கடல் அலைபோல் தவிக்கும், மறவாதே.

326. ஏ மனமே! கண்ணுக்குத் தெரியாத கடவுள் உனது ஆன்மாவாகவே இருப்பதை நம்பு, மறவாதே.

327. ஏ மனமே! தன்னைத் தெரிந்து கொள்ளாதவனே இழிவுள்ள நீச்சன் ஆவன், மறவாதே.

328. ஏ மனமே! உனது வழி தவறுமானால் நீ கெடுவாய், ஜாக்ரதை.

329. ஏ மனமே! பெருமையுள்ள மனிதன் வாய்பேசாது கடமையை உண்மையாகச் செய்து மேலும் மக்களால் பெருமையடைவான், மறவாதே.

330. ஏ மனமே! உன்னிடமுள்ள குறை உன்னை நீ தெரிந்து கொள்ளாததேயாகும், மறவாதே.

331. ஏ மனமே! உலகில் மிக கடினமானது என்னவென்றால் நல்லவனாக இருப்பதொன்றேயாகும், மறவாதே.

332. ஏ மனமே! ஒன்றையும் நினைக்காமல் இருப்பதுவே ஏகாந்தத்தில் இருப்பதாகும், மறவாதே.

333. ஏ மனமே! கூட்டத்தில் இருப்பினும் சங்கல்பமின்றி இருப்பவனே ஏகாந்தத்தில் இருப்பவனாவன், மறவாதே.

334. ஏ மனமே! ஆகாயத்தில் பறக்கும் பறவைக்கு பூமியில் உள்ள மாமிசத் துண்டை பார்த்துவிடும் திறமையிருப்பினும், விதி சதி செய்யும்போது வேடன் விரித்த வலையில் சிக்கிக் கொண்டுமடிவதை பார்த்துக் கொள் மறவாதே.

335. ஏ மனமே! உன் தலை எழுத்தில் ஓர் எழுத்தைக் கூட உன்னால் அழிக்க

முடியாது, மறவாதே.

336. ஏ மனமே! ஆகாயத்தில் வீடு கட்டி வாழ்ந்தாலும் விதியின் பிடியில் இருந்து நீ தப்பிவிட முடியாது, மறவாதே.

337. ஏ மனமே! உனது உடல் மறித்துவிடும், உனக்கு மரணமில்லை, மறவாதே.

338. ஏ மனமே! எந்த நிமிஷமும் இறப்பதற்குத் தயாராக இருந்துவா, மறவாதே.

339. ஏ மனமே! இறைவனை பின்பு நினைத்துக் கொள்ளலாம் என்று இருப்பவன் முட்டாள், மறவாதே.

340. ஏ மனமே! செத்த பிறகு ஜீவன் முக்தி அடையாது, மறவாதே.

341. ஏ மனமே! ''நான் யார்'' எனக் கேட்டுணர்வாயானல் மரணத்தை வென்றவனுவாய், மறவாதே.

342. ஏ மனமே! சமையலுக்கு நெருப்பு வேண்டுவதைப் போல் மோக்ஷத்திற்கு ஞானம் வேண்டும், மறவாதே.

343. ஏ மனமே! உடல், பொருள், ஆவிகளைத் தியாகம் செய்தவனே மோக்ஷமடைவன், மறவாதே.

344. ஏ மனமே! சந்திரனைப் போல் நீயும்நன்மை ஒன்றையே செய்துவா, மறவாதே.

345. ஏ மனமே! உறுதியான திடசித்தமொன்றே உனக்கு முதலில் வேண்டும், மறவாதே.

346. ஏ மனமே! உனக்குள் ஒன்று ''நான் யார்''

எனக் கேட்பாயானுல் உனக்குத்துணை ''நான்'' என்பதை உணர்வாய், மறவாதே.

347. ஏ மனமே! கடவுளோடு நீ இரண்டறக் கலந்துவிட ஒரே வழி ''நான் யார்'' என உனக்குள் கேட்பதொன்றேயாகும், மறவாதே.

348. ஏ மனமே! இன்றே உன்னைத் தெரிந்து கொள். நாளை என்பது விதிக்கு சொந்தமாகும், ஜாக்ரதை, மறவாதே.

349. ஏ மனமே! விதியின் கையில் உனது உயிர் இருக்கிறது. நீ நினைத்த போது இறக்க முடியாது. மறவாதே.

350. ஏ மனமே! நீ செய்துள்ள கர்மபலனுக்குத் தக்கவாறு மறுபிறப்பை அடைவாய், ஜாக்ரதை.

351. ஏ மனமே! கடவுளின் அனுக்கிரகமே மரணமாகும், மறவாதே.

352. ஏ மனமே! பிறர் உதவியை நம்பி இருப்பாயானுல் ஏமாறுவாய், ஜாக்ரதை.

353. ஏ மனமே! குற்றம் என்று நன்கு தெரிந்துள்ளதை துணிந்து செய்பவன் அக்ஞானியாவன், மறவாதே.

354. ஏ மனமே! பிறர் உன்னைப் பாவி என்று சொல்லாதபடி நடந்து கொள், மறவாதே.

355. ஏ மனமே! பிறரை நிந்திப்பவனுக்காகவே தான் நரகம் உண்டாக்கப்பட்டுள்ளது, மறவாதே.

356. ஏ மனமே! துக்கத்தினின்றும் கொடிய

பாவத்தினின்றும் விடுபட வேண்டுமென்ருல் ஆசைகளைத் தியாகம் செய்வதொன்றே நேரான வழியாகும், மறவாதே.

357. ஏ மனமே! சங்கல்பமே நரகம் சங்கல்பத்தியாகமே மோக்ஷமாகும், மறவாதே.

358. ஏ மனமே! பிறரைப் போல் நீ இருக்க வேண்டுமென நினைப்பாயாளுல் பயித்தியமாகிவிட நேரும், ஜாக்ரதை.

359. ஏ மனமே! தான்தானுக இருப்பவனே சான்ருேன், மறவாதே.

360. ஏ மனமே! உனக்குள் கடவுள் "தான்" என்று இருப்பதை உணர நீ "நான் யார்" எனக்கேள். மறவாதே.

361. ஏ மனமே! தான் தானுக இருப்பதிலேயே மேலான இன்பம் உள்ளது மறவாதே.

362. ஏ மனமே! விதியின்படி உலகம் இயங்கி வருகிறதை மறவாதே.

363. ஏ மனமே! வயிரமுள்ள உறுதியான மரக்கட்டையைத் துளைத்துவிடும் சக்தி உள்ள வண்டு, தாமரை இதழ்களுக்குள் சிக்குண்டு விடுவதும் அதன் விதிதான் என்பதை மறவாதே.

364. ஏ மனமே! உனது அழகிய சரீரம் அழுகிவிட்டால் தாய், தகப்பன், மனைவி, மக்கள், நண்பர்கள் எவருமே விரும்ப மாட்டார்கள், மறவாதே.

365. ஏ மனமே! எமனை ஏமாற்றிவிட முடியாது, ஜாக்ரதை, மறவாதே.

366. ஏ மனமே! ஆசையுள்ளவன் ஒருவனே மரணத்தைக் கண்டு அஞ்சுவன், மறவாதே.

367. ஏ மனமே! அறிவுகெட்டவன் தர்மத்திற்கு மாருக நடப்பன், மறவாதே.

368. ஏ மனமே! ஆசையிருப்பவனின் இதயம் நரகமாகி விடுகிறதை நீ மறவாதே.

369. ஏ மனமே! யோக்யனுக்காகவே ஸ்வர்கமும் அயோக்கியர்களுக்காவே நரகமும் சிருஷ்டிக்கப்பட்டுள்ளதை மறவாதே.

370. ஏ மனமே! சத்சங்கமே மோக்ஷம். துஸ்சங்கமே நரகம் என்பதை மறவாதே.

371. ஏ மனமே! சகிப்புத் தன்மையையும், பொறுமையையும் உனது இரண்டு கண்களாக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

372. ஏ மனமே! உலகில் உயர்ந்தோர்களைத் தேடாதே. நீயே அந்த உயர்ந்தோனுகிவிடு, மறவாதே.

373. ஏ மனமே! விதியே உனது விரோதி, மறவாதே.

374. ஏ மனமே! விதி சதி செய்துவரும் நேரத்தில் உன்னிடமுள்ள வீர, தீர, பராக்கிரமமெல்லாம் உதவாது போய்விடும், ஜாக்ரதை.

375. ஏ மனமே! விதியினுல் தான் நீ உயிருடன் இருக்கிருய், மறவாதே.

376. ஏ மனமே! விதியினுல் வருவதை பொறுமையாக சகித்துக் கொள்வதே விதியை வென்றதாகும், மறவாதே.

377. ஏ மனமே! வறுத்த விதை மீண்டும் முளைக்காததைப்போல் உனக்குள்ளிருக்கும் ஆசையை வறுத்துவிடுவையானுல் மீண்டும் பிறக்கமாட்டாய், மறவாதே.

378. ஏ மனமே! ஆசையுள்ளவனே மீண்டும் பிறவியெடுப்பன், மறவாதே.

379. ஏ மனமே! புறப்பொருளை நினைப்பவனின் மனம் சதா சஞ்சலப்பட்டு துக்கத்தை அனுபவித்துவரும், மறவாதே.

380. ஏ மனமே! உலகம் ஒரு பெரிய நாடகமாகும், மறவாதே.

381. ஏ மனமே! உலக நாடகத்தில் நீயும் ஒரு நடிகனுவாய், மறவாதே.

382. ஏ மனமே! கடவுளிடமிருந்து உன்னைப் பிரித்து வைப்பது ஆசையாகும், நம்பு, மறவாதே.

383. ஏ மனமே! உனது சங்கல்பத்தில் சொர்க்கமும் இருந்து வருகிறது, ஜாக்ரதை.

384. ஏ மனமே! முக்தி நெறியின் நேரான மார்க்கம் நிராசையோடு உறுதியாக இருப்பதாகும், மறவாதே.

385. ஏ மனமே! நான் யார் எனக்கேட்டுணர்ந்தவனுக்கே சொர்க்கம் கிட்டும், மறவாதே.

386. ஏ மனமே! உனது கூடவரப்போவது புண்ய

பாவங்களாகுமென்பதை மறவாதே.

387. ஏ மனமே! விதியின் பிடியில் நீ சிக்குண்டசமயத்தில் அனைவரும் உனக்கு விரோதிகளாகி விடுவார்கள் ஜாக்ரதை.

388.. ஏ மனமே! பிறப்பதும் விதியாகும், இறப்பதும் விதியாகும், மறவாதே.

389. ஏ மனமே! மரத்தின் வேர்போன்ற ஆசை, வேரை வெட்டிவிடுவையானல் மரம் துளிர்க்காது, மறவாதே.

390. ஏ மனமே! ஆசையற்றவனின் உ்யிர் சுகமாக அவனது உடலை விட்டுபிரியும், மறவாதே.

391. ஏ மனமே! சந்தேகமே நரகமாகும், மறவாதே, ஜாக்ரதை.

392. ஏ மனமே! ஆசைப்படுகிறபடி நீ ஆகிவிடுவாய், ஜாக்ரதை.

393. ஏ மனமே! ஏகாந்தம் உனது அகத்துள் இருக்கிறதை மறந்துவிடாதே.

394. ஏ மனமே! என் தலை விதி ''நான் யார்'' எனக் கேட்டுணர்வதாகுமென்று சொல் மறவாதே.

395. ஏ மனமே! வியாதிக்கு நல்ல மருந்து உண்டு விதிக்கு மருந்தில்லை. மறவாதே.

396. ஏ மனமே! உனது உயிர் எந்த நிமிஷமும் உன்னை விட்டுப் போய்விடலாம், ஜாக்ரதை, மறவாதே.

397. ஏ மனமே! பற்றற்றவன் மரணத்தை சுகமாகவே பெற்றுக்கொள்வான்,

மறவாதே.

398. ஏ மனமே! சத்சங்கம் ஒன்றே சந்தோஷத்தை உண்டாக்கும்.

399. ஏ மனமே! தன்னை மறப்பதும் கடவுளை மறப்பதும் ஒன்றேயாகும், மறவாதே.

400. ஏ மனமே! பற்றுள்ளவனுக்கு ஏகாந்தமான இடம் உள்ளிலும் இல்லை, வெளியிலும் இல்லை மறவாதே.

401. ஏ மனமே! எமன் நொடிக்குநொடி உன்னிடம் நெருங்கி கொண்டிருப்பதை மறந்துவிடாதே.

402. ஏ மனமே! உலக மக்கள் அனைவருமே பழுத்த இலைபோல காலத்தில் உதிர்ந்து மடிந்து போவார்கள், மறவாதே.

403. ஏ மனமே! அடக்கத்தை ஆபரணமாக்கிக் கொண்டுவிடு, மறவாதே.

404. ஏ மனமே! நீ பிறருடன் சேராமல் தனித்திரு, மறந்துவிடாதே.

405. ஏ மனமே! நல்லதை நினைத்தும், நல்லதைப்பேசியும், நல்லதைச் செய்தும் நீ நல்லவனுகிவிடு, மறவாதே.

406. ஏ மனமே! நிராசையுடன் இருப்பதே மோட்சமாகும், மறவாதே.

407. ஏ மனமே! அதிகமான பேச்சினுல் அனர்த்தமே விளையும், ஜாக்ரதை, மறவாதே.

408. ஏ மனமே! பிறருடைய மனம்

புண்ணுகாதபடி பணிவன்புடன் மரியாதையோடு இனிமையாகப்பேசு, மறவாதே.

409. ஏ மனமே! உலகில் பேசாத மொழிகள் எல்லாம் உனக்குச் சொந்தம், பேசிவிட்ட மொழி எல்லோருக்கும், சொந்தம் என்பதை மறவாதே.

410. ஏ மனமே! கண்டதையும் கேட்டதையும் சொல்லாமல் இருப்பவனே கவலையற்றிருக்க வாழமுடியும், மறவாதே.

411. ஏ மனமே! அன்போடு கூடிய இனிய சொல்லும் உன்னிடம் இருந்து வருமானால் இன்பத்துடன் இருந்து வரலாம், மறவாதே.

412. ஏ மனமே! பிறரான், உன்னை சொர்க்கத்திற்கு அனுப்பிவிட முடியாது, மறவாதே.

413. ஏ மனமே! ஆசையுள்ளவனை நிழல்போல் துன்பமும் தொடர்ந்து வரும் மறவாதே.

414. ஏ மனமே! எது வரினும் அனைத்துமே கடவுள் செயல் என்று உறுதியாக நம்பி விடுகிறவன் எதற்கும் கவலைப்பட மாட்டான், மறவாதே.

415. ஏ மனமே! மிகக்கொடிய துன்பத்தையும் பொறுமையுடன் சகித்துக்கொள்ளும் திறமைசாலியே வீர புருஷனாவன் என்பதை மறவாதே.

416. ஏ மனமே! வருகிற துன்பத்தை இன்பமாகவே ஏற்றுக் கொண்டு விடுவையானால் துன்பம் பறந்தோடிவிடும், மறவாதே.

417. ஏ மனமே! உண்மை தெரியாத முட்டாள்கள் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில் வாயைத் திறவாதவனே நல்லவன் என்பதை மறவாதே.

418. ஏ மனமே! உன்னைப்பிறர் தூஷிக்கும்படி நீ நடந்துகொள்ளாதே ஜாக்ரதை.

419. ஏ மனமே! நீ இருபொருள்பட பேசுவதினுல் அந்தப் பேச்சு உன்னையே கவலைக்கிடமாக்கிவிடும், ஜாக்ரதை, மறவாதே.

420. ஏ மனமே! உனது பேச்சில் இருந்தே உன்னுடைய புத்திசாலித்தனத்தை சுலபமாக அறிவாளிகள் அறிந்து கொண்டுவிடுவார்கள், ஜாக்ரதை, மறவாதே.

421. ஏ மனமே! சளசளவென்று அதிகமாக பேசுகிறவன் தனது அந்தராத்மாவின் குரலைக் கேட்கமாட்டான், மறவாதே.

422. ஏ மனமே! தகுதி அற்ற நீ பதவியை விரும்புவதே முட்டாள் தனமாகும், மறவாதே.

423. ஏ மனமே! இன்பம் பொன் விலங்காகும், துன்பம் இரும்பு விலங்காகும், மறவாதே.

424. ஏ மனமே! உனக்கு பெருத்த கஷ்டம் வரும்போதுதான் நீ பொறுமையுடன் இருந்து வரவேண்டும் மறவாதே.

425. ஏ மனமே! இன்பம் துன்பம் இரண்டுமே உனது சத்ருக்களாகும், மறவாதே.

426. ஏ மனமே! உலகில் இன்பமும் இல்லை துன்பமும் இல்லை, இருப்பது நீ ஒருவனேதான் ''நான் யார்'' எனக் கேட்டால் தான் நீ உணரலாம், மறவாதே.

427. ஏ மனமே! அரைக்குடம் நீர் தழும்பிக் கொண்டுதான் இருக்கும், ஜாக்ரதை, மறவாதே.

428. ஏ மனமே! புண்ய புருஷனிடமே நல்ல பேச்சைக்கேட்க முடியும், மறவாதே.

429. ஏ மனமே! பேச்சாளிகளிடம் முக்கியமான செய்திகளை மட்டும் ஜாக்ரதையுடன் சுருக்கமாக பேசு, மறவாதே.

430. ஏ மனமே! கேட்கும் கேள்விக்கு மட்டும் பதில் சொல்லிவிட்டு உட்கார்ந்து கொள்வதே உனக்கு நல்லது, மறவாதே.

431. ஏ மனமே! கடவுளை தனதான்மாவாகக் கண்டு கொள்ள சுலபமான வழி மனத்தை மௌனமாக்கிக்கொண்ட விடுவதாகும், மறவாதே.

432. ஏ மனமே! கடவுள் நம்பிக்கை இல்லாதவனை சஞ்சலங்கள் பற்றிக் கொண்டுவிடும், மறவாதே.

433. ஏ மனமே! கஷ்ட காலத்தில் கடவுளை மறந்து அய்யோ வென்று அலறுபவன் மிகக்கொடிய பாபியாவன், மறவாதே.

434. ஏ மனமே! நான் கஷ்டப்படுவதற்கு நீ தான் காரணம், ஜாக்ரதை, மறவாதே.

435. ஏ மனமே! துன்பத்தை அனுபவித்து

தெரிந்து கொள்ளாதவன் இன்பம் எப்படி பட்டதென்பதை அறிந்துகொள்ள முடியாது, மறவாதே.

436. ஏ மனமே! தீயானது காட்டை எரித்துவிடும். கவலேயோ உயிருள்ள மனிதனே சதாகாலமும் எரித்துக் கொண்டே இருக்கும், மறவாதே.

437. ஏ மனமே! போக்கிரிகளின் பேச்சில் இனிமையிருக்கும், அதை நம்பி ஏமாந்துவிடாதே, ஜாக்ரதை.

438. ஏ மனமே! உண்மையான மனமௌனத்தை எப்படி அனுஷ்டிப்பதென்பதை உறுதியாக தெரிந்து கொள்கிறவனே புண்யசாலியாவன், மறவாதே.

439. ஏ மனமே! உன்னிடம் இன்சொல் இருக்கும்போது, முரட்டுத்தனமாக நீ பேசுவாயாளுல் அந்தப்பேச்சு உன்னே மதிப்பற்ற முட்டாள் ஆக்கிவிடும், ஜாக்ரதை, மறவாதே.

440. ஏ மனமே! சமயமறிந்து பேசத்தெரியாதவனின் பேச்சானது பேசியவனின் மரணத்தைப் போக்கடித்து விடும், ஜாக்ரதை, மறவாதே.

441. ஏ மனமே! ஆன்மானுபவத்தை அதி சுலபத்தில் உண்டாக்கவல்ல சக்தி மன மௌனத்திடமே உள்ளது, மறவாதே.

442. ஏ மனமே! பற்று அற்றவுடன் மன நிறைவும் மன அமைதியும் தானே உண்டாகி விடும், மறவாதே.

443. ஏ மனமே! உடலை நான் என்பதும் இந்தச் சொத்துக்கள் அனைத்துமே என்னுடையது என்பதுமே மாயையாகும். அந்த மாயையிருக்கும் வரை துக்கமும் உனது கூடவே இருக்கும், மறவாதே.

444. ஏ மனமே! எனக்கு நன்மையையும் தீமையையும் விளைவித்துக் கொள்கிறவன் என்னையன்றி வேறொருவனும் இல்லை என்பதை நான் நன்கறிவேன் மறந்துவிடாதே.

445. ஏ மனமே! இன்ப துன்பத்தை நன்கு அனுபவித்தவர்களாலேயே உனக்கு நன்கு பாடம் சொல்லித் தரமுடியும், மறவாதே.

446. ஏ மனமே! கவலையானது மனிதனைப் பயித்தியமாக்கிவிடும், ஜாக்ரதை, மறவாதே.

447. ஏ மனமே! கடந்து போனதை நினைத்துக் கவலைப்படுகிறவன், தன்னைத்தானே கெடுத்துக் கொள்கிற முட்டாள் என்பதை நீ மறவாதே, ஜாக்ரதை.

448. ஏ மனமே! அதிகம் பேசுகிறவன் முழு மனதுடன் செயலில் ஈடுபடமாட்டான் என்பதை மறவாதே.

449. ஏ மனமே! உன்னைப் பிறர் மதிக்க வேண்டுமென்றால், நிதானமாக, மிருதுவான மொழிகளில் அன்புடன் உண்மையைப் பேசு, மறவாதே.

450. ஏ மனமே! காக்கையின் குரலை குயிலின் குரல் என்று வர்ணிப்பவனை நம்பிவிடாதே,

ஜாக்ரதை.

451. ஏ மனமே! பேசத் தெரிந்தவனைப் போல் நடிப்பாயானால் சபையில் நீ மோசமான நிலைக்கு ஆளாக நேரும், ஜாக்ரதை.

452. ஏ மனமே! உனக்குள்ளிருக்கும் ஆசைகளை எல்லாம் வேரோடு பிடுங்கி எறிந்துவிடும், அபார சக்தி மன மௌனத்தினிடமே உளது, மறவாதே.

453. ஏ மனமே! நிராசை ஒன்றே கவலையை அறவே போக்கி மன அமைதியை நிரந்தரமாக்கிவிடும், மறவாதே.

454. ஏ மனமே! உன்னிடமுள்ள குறைகளை நீ தெரிந்து கொண்டு அவைகளை ஒழிக்காமல் இருப்பது தான் மாயை, மறவாதே.

455. ஏ மனமே! தான் அனுபவித்துவரும் துக்கங்களுக்கெல்லாம் காரணம் நான் செய்துள்ள குற்றமேயாகும், மறவாதே.

456. ஏ மனமே! அஜாக்ரதை இருக்குமானால் அது பெரிய துரதிஷ்டமாகும், மறவாதே.

457. ஏ மனமே! சுறுசுறுப்புடன் ஊக்கமாக வேலையில் ஈடுபட்டவனிடம் கவலைகள் மறந்து போகும், மறவாதே.

458. ஏ மனமே! இம்மையில் நீ ஜீவன் முக்தனாகிவிட வேண்டும் என்றால் உன் மனத்தை மௌனமாக்கிக் கொண்டு விடு மறவாதே.

459. ஏ மனமே! முட்டாள்களிடம் பேசுவதால் உனது நல்ல நேரம் விரயமாகிவிடும்

ஜாக்ரதை, மறவாதே.

460. ஏ மனமே! அதிகப்பிரசங்கி ஆணவத்திஞல் அடிக்கடி வழுக்கி விழுவன், மறவாதே.

461. ஏ மனமே! பேச்சே மனிதனே உயர்த்தும் பேச்சே மனிதனே தாழ்த்தி விடும் ஜாக்ரதை, மறவாதே.

462. ஏ மனமே! காட்டிக் கொடுப்பவன் துரோகியாகி விடுவதை நீ மறவாதே.

463. ஏ மனமே! ஆசையுள்ளவனிடம் கடுகு அளவுள்ள மகிழ்ச்சியும் இராது, மறவாதே.

464. ஏ மனமே! தங்கத்தை உரைத்துப் பார்த்து சோதித்து வருவதைப் போல் உன்னே சோதித்துப் பார்த்துக்கொள்ள கடவுளே மன சாட்சியாக உனக்குள் இருப்பதை மறந்துவிடாதே.

465. ஏ மனமே! எனக்கு இது வருமோ அது வருமோ, என்று நீ நினேக்கும் எண்ணங்களே உனக்குள் துன்பத்தை தந்து கொண்டிருப்பதை நீ மறந்துவிடாதே.

466. ஏ மனமே! உனக்குக் கஷ்டம் அதிகரித்து கொண்டிருப்பதற்கு காரணம் உன்னிடம் உள்ள அஜாக்ரதையாகும், மறவாதே.

467. ஏ மனமே! சிரிப்பு நல்லதையும் செய்யும், கெடுதலேயும் செய்துவிடும், ஜாக்ரதை, மறவாதே.

468. ஏ மனமே! அழகிய பேச்சுகள் எல்லாம் உபதேசமாகிவிடாது, ஜாக்ரதை, மறவாதே.

469. ஏ மனமே! பிறரை உனது இனிமையான

பேச்சினுல் ஏமாற்றி விடாதே, ஜாக்ரதை, மறவாதே.

470. ஏ மனமே! அமைதி வேண்டுமென்ருல் பிறரை நினையாதிருந்துவா. முடியாவிட்டால் பிறரை பற்றிப் பேசாமல் இருந்துவா, ஜாக்ரதை, மறவாதே.

471. ஏ மனமே! பேராசை பிடித்தவனிடம் இருந்து நீ நன்மையடைய முடியாது, மறவாதே.

472. ஏ மனமே! இன் சொல்லாலோ அல்லது தீய சொல்லாலோ உனது ஆத்மானுபவத்திற்குப் பிரயோஜனமில்லை, மறவாதே.

473. ஏ மனமே! எதையுமே எதிர்பாராது இருப்பதுவே உனது கடமை, ஜாக்ரதை, மறவாதே.

474. ஏ மனமே! அறியாமையுடன் இருப்பதே துர்அதிஷ்டமாகும், மறவாதே.

475. ஏ மனமே! இது எனக்கு அவசியம் தேவை என்று நினைக்கிருயோ, அதுதான் உன்னை கெடுக்க வந்த மாயையாகும், மறவாதே.

476. ஏ மனமே! துணிவே உனக்குத் துணைவனுகும், நம்பு, மறவாதே.

477. ஏ மனமே! துன்பத்தை அனுபவித்தவனே திறமையுடன் பணிபுரிவன், மறவாதே.

478. ஏ மனமே! நகைச்சுவையை அனுபவிக்கத் தெரிந்தவன் தூக்கு மேடையில் இருப்பினும் கவலைகளை மறந்துவிடுவான், மறவாதே.

479. ஏ மனமே! உண்மையான தொண்டனிடம் பேச்சிராது. அவன் மௌனமாகவே கைங்கர்யத்தை . உண்மையாகச் செய்துவிடுவன், மறவாதே.

480. ஏ மனமே! உனது பேச்சு நாட்டையே கெடுத்துவிடாமல் இருக்கட்டும், ஜாக்ரதை.

481. ஏ மனமே! எதையும் முன்ஜாக்ரதையுடன் பேசு. பேசிவிட்டால்அதை அழிக்க எவராலும் முடியாது, ஜாக்ரதை, மறவாதே.

482. ஏ மனமே! வம்பளப்பவனிடம் நீ ஜாக்ரதையாக பேசிவா, மறவாதே.

483. ஏ மனமே! உனக்கு உபதேசம் செய்வதற்கென்றே உலகில் உள்ள அனைத்தையும் அனைவரையும் கடவுள் சிருஷ்டித்துள்ளான், மறவாதே.

484. ஏ மனமே! பேராசையுடையவன் நற்செயல்களில் ஒன்று கூட செய்யமுடியாது, மறவாதே.

485. ஏ மனமே! பகுத்திறவு இருந்தும், பகுத்தறிந்து வாழத்தெரியாத நீயும் ஒரு மனிதனா? ஜாக்ரதை, மறவாதே.

486. ஏ மனமே! துன்பத்தை நன்கு அனுபவத்தவனே பிறர் துன்பத்தை நன்கு புரிந்து கொள்ளமுடியும் மறவாதே.

487. ஏ மனமே! முதலில் அனைவரிடமும் பணிவன்புடன் கீழ்படியக் கற்றுக்கொள்கிறவனே எல்லோரையும் நன்கு ஆளமுடியும், மறவாதே.

488. ஏ மனமே! சிரிக்க முடியாதவன் பாவியாவன், மறவாதே.

489. ஏ மனமே! பேசுவது மட்டும் கைங்கர்யமாகிவிடாது, மறவாதே.

490. ஏ மனமே! உனது வாயினின்று வெளிவரும் நல்ல பேச்சினுல் மேலான வாழ்வும், தீய பேச்சினுல் கீழ்த்தரமான வாழ்வும் இருந்து வருவதை மறவாதே.

491. ஏ மனமே! பேசத்தெரிந்தும் முட்டாள்தனமாகப் பேசுவதைவிட பேசத் தெரியாத முட்டாளே நல்லவனுவன், மறவாதே.

492. ஏ மனமே! பேசுவது மிகவும் சுலபம், செயல் புரிவதே கஷ்டமாகும், மறவாதே.

493. ஏ மனமே! மனமௌனத்தை ஆபரணமாக்கிக் கொண்டு விடு. ஸ்வயம் பிரகாசத்துடன் நீ ஜ்வலிப்பாய், மறவாதே.

494. ஏ மனமே! மனிதனுக்கு அழிவு காலம் நெருங்கிவரும்போது கடவுளேயும் தனது விரோதியாக்கிக் கொண்டு விடுவன், மறவாதே.

495. ஏ மனமே! உலகில் உண்மையாக உன்னே நினைத்துக் கவலேப்பட மனித சமூகத்தில் ஒருவர் கூட இல்லே என்பதை நம்பு, மறவாதே.

496. ஏ மனமே! மறைவில் நீசெய்து வந்த தீயநடத்தையினுல் இந்த வயோதிகத்தில் துன்புறுகிருய் மறவாதே.

497. ஏ மனமே! ஒவ்வொரு துன்பமும் உனக்கு மகத்தான இன்பத்தைத் தரவே வந்துள்ளதாக நீ நம்பிவிடுவையானுல் கவலை அணுவளவும் உன்னிடம் இராது, மறவாதே.

498. ஏ மனமே! சூர்யநாராயணனையும் மேகம் மறைத்துவிடுவதைப் பார்த்துக்கொண்டு, நீயும் பொறுமையாக இருந்துவா, மறவாதே.

499. ஏ மனமே! சிரிப்பவனே ஆரோக்கியமுடையவன், மறவாதே.

500. ஏ மனமே! நாவை, அடக்கத் தெரியாதவன் எவனே, அவனே முட்டாள், ஜாக்ரதை, மறவாதே.

501. ஏ மனமே! நீ நினைப்பவைகளை பிறரிடம் சொல்வதற்கு முன்பு, அதைச் சொல்லலாமாவென்று தீர்க்காலோசனை செய்துவிட்டுச்சொல், ஜாக்ரதை, மறவாதே.

502. ஏ மனமே! கொடியசிந்தனைகளைச் சிந்திப்பவனிடம் இருந்து பிறர் மனம் புண்படும்படியான சுடும் வார்த்தைகளே வெளிவரும், ஜாக்ரதை, மறவாதே.

503. ஏ மனமே! நினைப்பதை யோசித்துச் சொல், ஜாக்ரதை.

504. ஏ மனமே! மௌனம் யோகிகளுக்கு மிகவும் நல்லது, முட்டாளுக்கு மிகமிக நல்லதாகும் என்பதை மறவாதே.

505. ஏ மனமே! அக்ஞானிக்கு சுகமும் துக்கமும் மாறி மாறி வந்துகொண்டிருக்கும்,

மறவாதே.

506. ஏ மனமே! உனதுதாய்தந்தையர்களோ, உடன் பிறந்தவர்களோ, சுற்றத்தார்களோ, நண்பர்களோ, அனைவருமே உன்னை நினைப்பதற்கு காரணம், உன்னிடம் இருப்பதை நீ கொடுப்பாய் என்கிற நம்பிக்கையாகும், மறவாதே.

507. ஏ மனமே! பிறர் அறியாமல் மறைவில் செய்த பாவத்திற்கு தண்டனை பிறவியெனப்படும் பெருநோய் உன்னைப்பற்றிக் கொண்டுள்ளதை மறவாதே.

508. ஏ மனமே! துன்பத்தைத் துணிவுடன் சகித்துக் கொண்டுவிடு, இன்புறுவாய், மறவாதே.

509. ஏ மனமே! திருடன் சிரிக்க மாட்டான், பிறருக்கு துரோகம் செய்வதையே வேலையாகக்கொண்டவன் சிரிக்கமுடியாது. தந்திரமுள்ளவன் சிரிக்கமாட்டான் என்பதை மறவாதே.

510. ஏ மனமே! நாவடக்க மற்றவன் இம்மையில் கேலிக்கு இலக்காகி விடுவன் என்பதை மறவாதே.

511. ஏ மனமே! உனக்கு அதிகம் தெரிந்திருப்பதாக நினைத்துக்கொண்டு அதிகமாகப் பேசுவாயானால் அதற்கு கிடைக்கும் பரிசு முட்டாள் பட்டமேயாகும், ஜாக்ரதை, மறவாதே.

512. ஏ மனமே! மிகக்கொடிய, தீய

மனமுள்ளவனிடமிருந்தே விஷம் போன்ற தீய சொற்கள் வெளிவரும், ஜாக்ரதை, மறவாதே.

513. ஏ மனமே! பிஞ்சில் பழுத்த கனிபோல் நீயும் ஆகிவிடாதே, ஜாக்ரதை.

514. ஏ மனமே! எவன் மனத்தை மௌனமாக்கிக் கொண்டு விடுகிருனே, அவனுடைய இதயத்தில் இருந்து வரும் கடவுளின் பேச்சை நன்கு கேட்டு இன்புற்றிருந்துவரும் புண்ய புருஷனுவன், மறவாதே.

515. ஏ மனமே! உனக்குத் துன்பங்கள் தொடர்ந்து வருமானுல் கஷ்டகாலம் வந்துவிட்டதை நினைத்துக்கொள், மறவாதே.

516. ஏ மனமே! வைரம்பட்டை தீட்டினுல் தான் பிரகாசிக்கும், அதைப் போல் உனக்குத் துன்பத்தைக் கொடுத்து உன்னைச் சோதித்தால்தான் நீயும் பிரகாசிப்பாய், மறவாதே.

517. ஏ மனமே! பிறருடைய பாராட்டை விரும்புகிறவன் எவனுமே மன அமைதியுடன் இருந்துவர முடியாது, மறவாதே.

518. ஏ மனமே! நல்ல எண்ணமற்றவன் சதா காலமும் துன்பப்படுவன், மறவாதே.

519. ஏ மனமே! பொய்யைத்துணிந்து சொல்கிறவனே ஒன்றை பலவிதமாக திரித்துக் கூறுவன் ஜாக்ரதை, மறவாதே.

520. ஏ மனமே! பிறர், உன்னை உள்ளன்புடன் நேசிக்கும் படியான பேச்சுகள் மட்டும்

உனக்குள்ளிருந்து வெளி வரட்டும், மறவாதே.

521. ஏ மனமே! உனது நாக்கு தீட்டிய கத்தியை விடக் கொடியதாகி விடக்கூடாது, மறவாதே.

522. ஏ மனமே! சிற்றின்பம் மிக்ககொடியது, அது, பேரின்பத்தை அறவே மறந்துவிடச் செய்வதோடு, நரகத்திற்கும் அழைத்துச் செல்லும் சத்ருவாகும், மறவாதே.

523. ஏ மனமே! மிகக்கொடிய துவேஷமுள்ளவனே பிறருடைய துன்பத்தைக் கண்டு சந்தோஷப்படுவன், மறவாதே.

524. ஏ மனமே! வாக்தேவி உனது நாக்கில் இருந்தால் நல்லதனைத்தும் பெற்றுத்தருவாள். மூதேவி இருந்தால் தூக்குமேடைக்கு உன்னை கொண்டு செல்வாள், மறவாதே.

525. ஏ மனமே! பற்றுள்ள வரை நீ துன்பப்பட்டாக வேண்டும், மறவாதே.

526. ஏ மனமே! சத்யம் பேசுகிறவனுக்கு மந்திரங்கள் சுலபமாக ஸித்தியாகிவிடும், மறவாதே.

527. ஏ மனமே! உண்மையே சத்யம், சத்யமே உண்மை நம்பு, மறவாதே.

528. ஏ மனமே! உண்மையான மனிதனிடம் விருப்பம் இராது வெறுப்பும் இராது மறவாதே.

529. ஏ மனமே! கவலை கார் இருளாகும், உண்மையோ பட்டப்பகலைப் போன்றதாகும்.

530. ஏ மனமே! நாணயமுள்ளவன் சுத்த ஸ்படிகம் போன்றவனுவன், மறவாதே.

531. ஏ மனமே! பலவீனமுள்ளவன் அடிமையாகவே இருப்பன், மறவாதே.

532. ஏ மனமே! சுதந்திரமானது சுவர்க்கத்திலும் இல்லை. கைலாசத்திலும் இல்லை உனக்குள்ளே தான் இருக்கிறது, மறவாதே.

533. ஏ மனமே! பெற்ற தாய், குற்றமுடையவர்களாக இருப்பினும் அவள்தான், உண்மையான தாய் ஆவாள், அதைப் போலவேதான் தாய்நாடும், மறவாதே.

534. ஏ மனமே! மேலிடத்தில் இருந்து வரும் தாட்சண்யத்துக்கு அடிமையாகி இருந்துவரும் நீதிபதியிடம் அநீதியே இருந்துவரும், மறவாதே.

535. ஏ மனமே! மக்களுக்கு நியாயம் கிடைக்கவேண்டுமென்பதற்காகவே நமது நாட்டின் நீதி மன்றங்களில் நல்ல நீதிபதிகளை நியமிக்கப்பட்டுள்ளது, நீதிபதிகள் நியாயத்தை நிலைநாட்ட வில்லையென்ருல் அந்த நாட்டில் நீதிக்குப் பஞ்சமேற்பட்டு விடும், பிறகு அநீதி தாண்டவமாடும், மறவாதே.

536. ஏ மனமே! பிறர் சந்தோசப்பட வேண்டியதற்காகப் பொய் சொல்லாதே,

மறவாதே.

537. ஏ மனமே! படிப்பின்சாரம் உண்மை பேசுவதாகும், மறவாதே.

538. ஏ மனமே! உண்மை, நடுப்பகலில் தெரியும், சூரியன் போன்றது, அதனுல்தான் அதை அக்ஞானிகள் நேரில் பார்க்க அஞ்சி கண்களை மூடிக் கொண்டு கடந்து செல்கிருர்கள், மறவாதே.

539. ஏ மனமே! மனிதனை கடவுள் படைத்தது உண்மையை தனக்குள் அறிவதற்காகவேதான், மறவாதே.

540. ஏ மனமே! நீ முதலில் உனது நாவை அடக்கி விடும் தவத்தைச் செய்துவா, மறவாதே.

541. ஏ மனமே! கட்டுப்பாடற்ற மனிதனின் மனம் அதன் போக்கில்போய் கொண்டிருக்கும், ஜாக்ரதை, மறவாதே.

542. ஏ மனமே! பிறருடைய உரிமைகளுக்கு ஆசைப் படுவையாஞல் நீ சுதந்திரமாக இருந்துவர முடியாது, மறவாதே.

543. ஏ மனமே! உண்மையான அமைதி எங்கிருக்கிறதோ அங்கேயே உறுதியாக இருந்துவா, மறவாதே.

544. ஏ மனமே! நியாயத்தை நிலை நாட்டாத நீதிபதிகளுக்காகவே புதிய நரகம் சிருஷ்டிக்கப்பட்டுள்ளது மறவாதே.

545. ஏ மனமே! ஆசைப்பிடியில் அகப்பட்டுள்ள நீதிபதியிடம் அநீதியைத் தான்

காணமுடியும், மறவாதே.

546. ஏ மனமே! சத்தியத்திற்கு சமமானது எந்த லோகத்திலும் இல்லை.

547. ஏ மனமே! உலகில் உண்மை பேசுகிறவனே மாமனிதனுவன், மறவாதே.

548. ஏ மனமே! உண்மையான வீர புருஷன் பொய் சொல்ல மாட்டான் மறவாதே.

549. ஏ மனமே! மெய்ப்பொருள் இருக்கும் பெட்டியின் திறவுகோல் உனக்குள்ளிருக்கும் உண்மையினிடமே உளது மறவாதே.

550. ஏ மனமே! மாமனிதன் எவனோ அவனே நேர்மையாய் நடப்பான், மறவாதே.

551. ஏ மனமே! நீதிகுந்துவதற்காகவே கடவுள் எல்லோரையும் படைத்துள்ளார், மறவாதே.

552. ஏ மனமே! கொடுத்த வாக்குறுதியைக் கைவிடுகிறவன் மிகக்கொடிய மஹாபாபியாவன், மறவாதே.

553. ஏ மனமே! வாக்குறுதியை மீறுகிறவனை கடவுளும் வெறுத்து விடுவன், மறவாதே.

554. ஏ மனமே! திருப்தியற்றவன் ஒரு அடிமையாவன், அவனை கடவுளாலும் திருப்தி செய்விக்க முடியாது, மறவாதே.

555. ஏ மனமே! சுதந்திரத்தினிடம் அணுவளவுள்ள சுயநலமும் இராது, மறவாதே.

556. ஏ மனமே! உண்மையான ஆரோக்கியம்

சுதந்திரத்தினிடம்தான் இருக்கிறது, மறவாதே.

557. ஏ மனமே! தேசமே பெருங்கோவிலாகும், தேச மக்களே கோவிலுக்குள் இருக்கும் தெய்வமாகும், மறவாதே.

558. ஏ மனமே! தேசத்துரோகியைப் போல் மிகக் கொடியபாவி இல்லவே இல்லே, மறவாதே.

559. ஏ மனமே! உனது நல்ல எண்ணத்திஞல் உனது உள்ளத்தைப் பெரிதாக உயர்த்திவிடு, மறவாதே.

560. ஏ மனமே! நியாயத்தை உறுதியாக நிலே நாட்டுகிறவனே வீர புருஷஞவன் மறவாதே.

561. ஏ மனமே! கோழைகளேக் கொண்ட நீதிமன்றத்தில் அநீதிகளே நிறைந்திருக்கும், மறவாதே.

562. ஏ மனமே! அநீதி ஒரு மாயை அது எல்லோரையுமே ஏமாற்றும் துரோகமும் செய்யும் ஜாக்ரதை. மறவாதே.

563. ஏ மனமே! உண்மையைக் கண்டறிய முடியாதவன் நீதிபதி பதவிக்கு அருகதை அற்றவஞவன் மறவாதே.

564. ஏ மனமே! கடவுளின் நிஜஸ்வரூபமே சத்யம் தான், மறவாதே.

565. ஏ மனமே! உள்ளத் தூய்மையுள்ளவனிடமே உண்மை உளது. நீயும் உள்ளத்தூய்மையுடன் இருந்து வா, மறவாதே.

566. ஏ மனமே! மெய்ப்பொருள்வேறு, உண்மைவேறல்ல, மறவாதே.

567. ஏ மனமே! கடவுளின் நிஜஸ்வரூபம் சத்யமாகும், மறவாதே.

568. ஏ மனமே! உண்மையான மனிதனிடம் நாத்திகம் இராது, மறவாதே.

569. ஏ மனமே! சத்தியத்தை வழிபடுவதே உனது ஸ்வதர்மமாகும், மறவாதே.

570. ஏ மனமே! உண்மையான மனிதனிடமே நீதி இருக்கும், மறவாதே.

571. ஏ மனமே! உனது நாணயத்தைப் பற்றி பேசாதே, நடத்தையில் காட்டிவிடு, மறவாதே.

572. ஏ மனமே! நீயும் ஒரு மனிதனுகிவிட வேண்டும் என்முல் சொன்ன சொல்லைக் காப்பாற்றிவிடு, மறவாதே.

573. ஏ மனமே! வாக்குறுதியை காப்பாற்முதவன் கடமையைச் செய்யத்தவறின பாவியாவன், மறவாதே.

574. ஏ மனமே! நீயவன் சுதந்திரத்தை வெறுத்து ஒதுக்கிவிடுவன், மறவாதே.

575. ஏ மனமே! உனது இஷ்டப்படி நடப்பதற்கு சுதந்திரம் இடம் தராது, ஜாக்ரதை, மறவாதே.

576. ஏ மனமே! சுயநலம் இருக்கும்வரை நீ ஒரு தியாகி ஆகிவிட முடியாது, மறவாதே.

577. ஏ மனமே! தாயும் தாய்நாடும் ஒரு

